உ

கடவுள்துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவ ரருளிச்செய்த

# பொன்னுருவிமசக்கை.

இஃது

சென்னை

சிந்தாதிரிப்பேட்டை

**வீராசாமிநாயுடு அவர்களால்**

பார்வையிடப்பட்டு

திரிசிரபுரம்

புஸ்தகஷாப்பு

**தி. சபாபதிபிள்ளை**

அவர்களாற்றமது

ஸ்ரீமட்டுவார்குழலம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

**MADRAS.**

**1891**





ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# பொன்னுருவிமசக்கை.

விநாயகஸ்தோத்திரம.

காப்பு.

சீதக்கமலமுள்ள செந்தாமரைமுகவா
பாதச்சிலம்பொலிக்க பலமணிகள்தான்கலிக்க
பொன்னுருவிமாலையனே புகல்கல்விசாலையனே
வன்னமருங்கோனே வளர்கொம்பெருங்கோனே
காரானைமாமுகனே கண்ணனமருமகனே
சீரானகல்வியனே செப்பும்போர்மெல்லியனே
நனிவாழைத்தீங்கனியே நவில்பலாமாங்கனியே
தனிமாலைபூண்மணியே தளசேகரக்கோரணியே
தேவருக்குந்தேனே தேசத்தோர்சீவனே
யாவருக்கும்பெரியவனே யமரர்க்குரியவனே
அத்திமுகனோ அரனார்மகனோ
சத்திமகிழ்புகல்வா சாற்றுமவனோமுதல்வா
பொன்னுருவிதனகதையைப்போற்றிமிகப்படிக்க
வின்னங்களவாராமல் விநாயகரேமுன்னிருந்து
மைந்தனுனிக்கதையை மகிழ்ச்சியாயாண்பாட
எந்தனிடவினைகள் எல்லாமபறந்தோட
புவிதனிலிக்கதைகளை பூர்த்தியாய்த்தான்பரவக்
கவிமுன்னேவந்துதவும கற்பகப்பிள்ளையாரே
பாட்டினிசைதெரியேன பாவினங்களசொல்லறியேன்
ஏட்டிலெழுதறியேன் எழுத்தாணிகூடறியேன்
உனக்கு அடிமையானேன உமபாபிரானுரே
எனக்குமொருமுகமாய இலங்கும்பெரியோனே
சொர்க்கம்போவாரகருக் துணையாயுதவிசெய்வீ
வர்க்கம்பலகாரம் வாங்கும்பெரியோனே
அப்பமெழுநூறும அதிரசங்களதொண்ணூறும்
செப்பரியவெள்ளருண்டை சேரநூறாயிரமாம்
உடைக்கநல்லதேங்காய்களொன்பதுநூறாயிரமாம்
படைக்கநல்லபச்சரிசிபதினாயிரக்கலமாம
கூனோடேயார்க்கும் குடத்தோடேசர்க்கரையும்
தேனோடேசெந்தினைமா தேவாமிர்தமுடன்

செங்கரும்புரஸ்தாளி சீனிப்பலாப்பழமும்
கதம்வாழைக்கனியும் தளாவில்லாமாங்கனியும்
தேங்காய்கொழுக்கட்டை திரளானபாணககமும்
மாங்காயவிளாங்கனியும் மாதுளைநற்கனியும்
ஒக்காரமாகவே ஒளிவானஐங்கராகரு
தீங்கில்லாசசாமபிராணி தீ தூபமூந்தத்தேன்
வரந்தரவேண்டுமையா மாயனமாருமகனே
சிந்தைதாங்கிழந்து சிறிபேன்புனனில்லுமையா

சுப்பிரமணியர்தோத்திரம்.

கந்தாகடம்பா கதிர்வேலாகாத்திகையின்
மைந்தாவென்றுன்னின்று வாழ்த்துகாருமையா
வள்ளிமணவாளா வந்தெனக்குமுன்னடவாய்
கள்ளமனதுறாமல் கடையேன்முன்னில்லுமையா
போருனைசீலா புனிதவடிவேலா
ஆருபடர்ந்தவனே அடியேனைககாருமையா
பத்திபுரின்றெழுகேன் பரிந்தெனக்குமுன்னடவாய்
புத்திதன்னைநீகொடுத்தால் புகழ்ச்சியுடனான்படிப்பேன்
எம்பிரான்முன்னடக்க என்கதையும்பின்னடக்க
தம்பிரானுமாசிவ சண்முகனேமுன்னடவாய்

சரஸ்வதிதோத்திரம்.

நாவிற்சரஸ்வதியே நாம்புகழுந்தேவியரே
பூவிலமர்ந்தவளே புல்லரிக்கமுன்ன வாய்
கலைமகளேபொன்னுருவி மசக்கைதன்னைபாடிபடிக்க
நிலையுடனெனதுநினைவிறவிருந்துமம்மாள்
தாமரையில்வாழுபவளே தாயேமுன்னில்லுமம்மாள்
நாமகளேபூமகளே நாயேன்முன்னில்லுமம்மாள்
சரணமென்றடிபணிந்தேன் தருகாக்கவேணுமம்மாள்
தருணமிதுசமயம் தயவுபுரியவேணுமம்மாள்
கறமைபம்பாடுகிறேன் காரிழையாள்தனகதையை
குற்றமிருந்தாலும் கூட்டிக்கொள்ளவேண்டுமம்மாள்

கதையின்வரலாறு-

பேடைமயில்கண்ணாள் பொருந்திருவாளநாயகமே
ஏழுமலையும் எழுமலையின்மேலேறி
மேலாககதவை யடுத்தவைத்தாள்திறந்து
அரண்மனைசாலகத்தை ஆகாகவேதான்திறந்து
பலகேணிவாசல் திறந்ததைபங்கிளியும்
நாலாலகுந்திரளாா நூறபெறுநவர்தான்பிறந்தார்
அவர்-அம்பலங்கோடும் அடங்கலும்மடலாறோர்
ஆண்மலடுபெண்மலடு அருகிருந்தாதான்மலடு
ஆனைமலடு அருஞ்சிங்கந்தான்மலடு
ஒட்டைமலடுஒதுங்கிருந்தார்தான்மலடு
குதிரைமலடு குடியிருந்தார்தான்மலடு

## பொன்னுருவிமசக்கை.

பசுவுமலடுவாசல் பணிசெய்வார்தான்மலடு
ஆடுமலடு அடங்கலும்தான்மலடு
தெருவிலிருக்கிற தென்னமரந்தான்மலடு
வாசலிலிருக்கிற வாழைமரந்தான்மலடு
புறக்கடையிலிருக்கிறபுன்னைமரந்தான்மலடு
பிச்சைக்குவருகிற பிராமணருந்தான்மலடு
ஆற்றில்கரைத்தபுளி யாகினேன்பாவிநான்
அங்காடிக்கிட்ட பதரானேனோ பாவிநான்
குன்றின்மேல்பெய்த மழையானேனோ பாவிநான்
குடத்திலேவைத்தவிளக்கானேனோ பாவியென்று
வையநகராளும் மகாராசன்தேவியரும்
மாநகரமாளும்மகாராசன்தேவியரும்
தேசத்தையாளுந் திரியோகிரன்தேவியரும்
அவளுக்கு-மைந்தரு இல்லையென்று மாதுமனஞ்சலித்து
மாதுமனஞ்சலித்து மண்டபத்தில்பள்ளிகொண்டாள்
வேஷ்டி விரித்துவெறுநிலத்தில்பள்ளிகொண்டாள்
ஆடைவிரித்து அழுதுமேபள்ளிகொண்டாள்
முந்தாணிதான்விரித்து முருகுழலாள்பள்ளிகொண்டாள்
மகாமுனியாழ்வாரும் வண்ணக்குழைபிள்ளையானை
பிராமணராய்வந்து பெருந்திருவாள்கைகொடுத்தார்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்தான்வாங்கி
மாதுமனமகிழ்ந்து மண்டபத்திற்கண்விழித்து
பொழுதுவிடியட்டும் பொன்னுருவிக்கேகொடுப்போம்
நாலுமகளவுகண்டேன் நற்கன்னிக்கேகொடுப்போம்
இப்படியாக இருக்கின்றவேளையிலே
கக்குல்விடிந்தது கதிரோனும்வந்துதித்தான்
செங்கண்மால்கோவிலுக்குத் திருக்காப்புச்சென்றது

### தாதிகள் சமையல்செய்தது.

அங்கொருதாதி அறிவுடையாள் காணெழுந்து
காஞ்சிநாடாளும் கருணர்வருவாரென்று
ஆக்குமடப்பளியை அலகிட்டுத்தாள்திறந்து
கோலமடப்பளியைக் குச்சிட்டுதாள்திறந்து
அடுப்புமெழுகியே அட்சதைக்காப்புமிட்டு
பானைகழுவி பனிநீருலைசாய்த்து
வடகடலில்செம்பொன்னை வாரியனல்மூட்டி
தென்கடலில்முத்தெள்ளத் திரட்டி உமிபிரித்து
ஆச்சாவுந்தேக்கும் அகிலும்பிளந்தடுக்கி
மாணிக்கக்கட்டி நெரிந்துநெருப்பாக்கி
குழலெடுத்துஊதினார் கொம்பனைமார்தாதியரும்
பூமியிலுள்ள புதுக்கறிகளத்தனையும்
காவடியில்கொண்டுவந்து போட்டார்கள்மன்னவர்கள்

அம்மிபடுத்தார் அரிவாள்மனை படுத்தார்
காய்த்தபூளைகாய் கறிமூளைகாய்சீரகமாம
அரைத்துவழித்தெடுத்தார் அன்பானதளிகைக்கு
சேர்த்துவழித்தெடுத்தார் செம்பொன்தளிகைக்கு
வாழைக்காய்கொய்வார் வழுதலங்காய்காம்பரிவார
ஈழைப்பலாக்காயை இலமுள்ளுபோக்கிடுவார்
சோதிபிறகக சிறப்பாகசெயதிடுவார்
அன்பான அவரைக்காய் ஆய்வார்கள்கொம்பனைமார்
மாதுளங்காய்பூசினிக்காய் வண்மையாய்வகுத்திடுவார்
கர்ப்பூரம்போலவே கருணைசிறுகிழங்கு
அற்புதம்போலே புளியிட்டுத்தான்சமைத்து
பொற்பதமதாகப் போதச்சமைத்துவைத்தார்
ஆயிரத்தெட்டு அருமைகறியும்போசனமும்
அன்னூத்தியெட்டு பொரிக்கறியும்போசனமும்
தாளிதமும்பச்சடியும் தன்னில்வகைக்கறியும்
அடிசில்சமைத்து அரைநாழிக்குள்ளாக
வெள்ளிகிடாரத்தில் வெந்நீருபசரித்தார்
பொன்னுங்கிடாரத்தில் போதநீர்பாரித்தார
தங்கக்கிடாரத்தில் தாகநீர்பாரித்தார்
சாலோடேபாரித்து வைத்தார் தடங்கண்ணார்
கனகமணிகட்டில்விட்டு கருணையொழுந்திருந்து
ஆடைகளைந்து ஆபரணந்தான்கழற்றி
ஆடையுங்கச்சும் அவிழ்த்தந்த ஆனைமுகன்
ஆபரணப்பெட்டி அபபோது தான்திறந்து
ஆபரணமெல்லாம் அடங்கலுமகழற்றிவைத்து
தகைபதியடிமேல் எறித்தளஞ்சியாரும்
மூகதுமிதியடியைத தொட்டுநடந்தார்
மூத்தால்கடக்கை முன்னேகிதானடந்தார்
மஞ்சனீர்சாலையிலே மன்னரும்போயபுகுந்தார்
அங்கேயொருதாதி அரிவையை பாரெனாடிவந்து
கெண்டியில்தீர்த்தமது கொடுத்தாள்கிளிமொழியாள்
மாலைமுடியானும் மஞ்சள்நீராடினார்
சரத்துயில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுயில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
சிவசிவாவென்று திருநீறுகாப்பணிந்து
அரகராவென்று அணிந்தாரேவெண்ணீறு
பத்திரஞ்சாத்தி பகவானைபூசைசெய்து
அர்ச்சைமலரெடுத்து சூரியனைபூசைசெய்து
இந்திரனைநோக்கி இருகையால்தான்தொழுது
ஐயனைமெய்யனை ஆயிரங்கணிந்திரனை
பொய்சொல்வார்க்கெல்லாம் பொருந்தவேதானமில்லை
மெய்சொல்வார்க்கெல்லாம் வேணபணிதானளித்து

## பொன்னுருவிமசக்கை:

முப்பத்துமுக்கோடி முனிவரையும்பூசைசெய்து
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளையுங்கைதொழுது
ஆடையுங்கச்சும் அணிந்தந்தஆணழகன்
சிருவ்வுங்கச்சும் எடுத்தந்ததோவீரன்
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்து
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
அமுதுண்ணும்மண்டபத்தே ஆணழகன்வந்திருந்தான்

கருணர் போசனமுண்ணது.

அங்குமொருதாதி அறிவுடையாளோடிவந்து
வட்டமணைபோட்டு வாழைகுருத்துமிட்டாள
இட்டமணைமேலே எழில்விசயாவீறறிருந்தார
புலிமுகக்கால்நிறுத்தி பொன்னுந்தளிகையிட்டார்
சிங்கமுகக்கால்நிறுத்தி செம்பொன்னுந்தளிகையிட்டார்
மற்றுமொருதாதி மாதரவளோடிவந்து
தாளிதமும்பச்சடியும் தன்னில்வகைக்கறியும்
பொரித்தபொறிக்கறியும் பொன்போல்சிருபருப்பும்
கூட்டுக்கறியும குழம்பில்வகைக்கறியும்
ஆயிரத்தெட்டு அருங்கறியுமபோசனமும்
சுற்றிலுங்கறியைவைத்து புத்துருக்குநெய்வார்த்தாள்
காராவிநெய்யதனைக் கைநிறையதான்சொரிந்தாள்
அந்தஅடிசில் அமுதுண்ணப்பிற்பாடு
அத்தளிகைமாற்றியே பொறறளிகைமுன்னேவைத்தாள்
காச்சியபாலும் கற்கண்டுமுப்பழமும
வாழைப்பழமும் மதுரையின்மாம்பழமும்
வேரின்புறத்தில் வெடித்தபிலாப்பழமும்
கொம்புசிறுதேனுங் கோதுபடாசர்க்கரையும்
மலையில்சிறுதேனும் மலையாளசர்க்கரையும்
இஞ்சியெலுமிச்சை இயலானநார்த்தங்காய்
கொஞ்சிகளாக்காய் கொடிதானதமர்த்தங்காய்
பச்சைமுளகாய் பசுந்தானஇஞ்சியும்
வடுந்தயிருமாய் எடுத்துவிட்டாளேந்திழையும்
அந்தஅடிசல் அமுதுண்டபிற்பாடு

கருணர்பொன்னுருவியைச்சேர்ந்தது

மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
ஏழரைநாழி அசரடிக்கவேணுமென்றார்
கருணர்படுந்துயரம் கடல்வண்ணர்தானறிந்து
அவர்சொல்லைக்கேட்டு அசரடித்தார்மாய்வரும்
காசிவளநாடாளும் கருணர்பெருமாளும்
கருஞ்சகருங்குழலை கையாலெடுத்தணைந்து
மதிமுகச்சுந்தரத்தை மன்னனெடுத்தணைந்து
தோள்நிறையச்சந்தனத்தை தேவியர்க்குமேனியெல்லாம்

இருபேருமென்றுசொல்லி இருந்தாரிருவருமாய்
காஞ்சிநாடாளும் கருணர்பெருமாளே
பொன்னுருவிமாளிகைக்குப் போனீரோபுண்ணியரோ
காயோபழமோதான் காஞ்சிநாடாண்டவரோ
போனதொருகாரியத்தை புண்ணியரோசொல்லுமென்றாள்
காஞ்சிநாடாளும் கருணரவர்கேட்டு
ஆச்சி-அளிந்தபழமகாணும் அதோவாராள்பாருமென்றான்
சித்திரத்தூணருகே செல்வன்மறைந்திருந்தான்
மாணிக்கத்தூணருகே மன்னன்மறைந்திருந்தான்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

பொன்னுருவிதன்னை அவமானம்
படுத்தினவராரென்றுதாதிகளை
வினவினது.

ஏழரைநாழிகையும் சென்றுதிளங்கொடிக்கு
கட்டிசுருட்டியவள் கட்டில்விட்டுகீழ்த்திறங்கது
வாரிசுருட்டியந்த மாதரவள்தானெழுந்து
தாழக்கருங்குழலாள் தாதிவாசலில்வந்து
தாதி-உடைதாரந்தான்குலைந்து ஒட்டியாணம்பூட்டிவிட்டு
என்-கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டுமிட்டு
மங்கையுமப்பூமுடியில் மல்லிகைப்பூமாலைசூட்டி
என்-வாய்திறந்துதாயபூலம் வைத்தவளைச்சொல்லுமென்றாள்

தாதிகள்பொன்னுருவிக்குமனந்
தேறுதல் சொன்னது.

தாய்போல்வளர்த்தெடுத்த தாதியருந்தான்கேட்டு
கண்டும்பொறுக்காத கணவன்அணைந்தாரோ
பார்த்தும்பொறுக்காத பத்தாவணைந்தாரோ
வெளியிலுஞ்சொல்லலாமோ வெவ்பொருதுங்கண்மணிநீ
மனதிலிராதேதான் மங்கையிளங்கொடியே
போதவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
கோபித்துக்கண்சிவந்தாள் கொல்லும்புலியதுபோல்
பற்றியகாகம் பவளம்போல்கண்சிவந்து
அவள்-ஆடையவள்கைபிடித்துக் கூந்தலொருகைபிடித்து

பொன்னுருவிமாமியாரிடத்தில்
வந்துவினவினது.

மாமியார்மாளிகைக்கு வாராள்மயில்போல
பேடைமயில்கண்ணல் பெருந்திருவாள்தான்பார்த்து
மாமியுங்கண்டுமங்கே வாவென்றுதானழைத்தாள்
இங்கேயிருமென்று இளர்ந்தட்டுதட்டமூற்றாள்
தட்டுங்குழலிட்டத்தே தார்குழலாள்வீற்றிருந்தாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்பார்த்து

வந்தொருகாரியத்தை வாய்திறந்துசொல்லுமென்றாள்
பாம்-உடைதாந்தான்குலைந்து ஒட்டியாணம்பூட்டிவிட்டு
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிப்பொட்டுமிட்டு
என்-மங்கைநல்லாள்பூமுடிக்கு மாணிக்கப்பொட்டுமிட்டு
வாய்திறந்துதாம்பூலம் வைத்தவரைசொல்லுமென்றாள்

பெருந்திருவாள் மருமகளாகிய பொன்னுருவிக்குமணந் தேறுதல் சொன்னது.

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
கண்டும்பொருக்காத கணவனிணைந்தாரோ
பார்த்தும்பொறுக்காத பதகாவணைந்தாரோ
காஞ்சிநாடாளும கருணைரவாவருவார்
கல்விபெரிய கருணைரவர்வருவார்
பின்னொருவர்வருவாரோ பொற்கொடியேயுன்னண்டை
மற்றொருவர்வருவாரோ மயிலனையேயுன்னண்டை
வெளியிலுஞ்சொல்வாரோ வேல்பொருதுங்கண்ணாளே
மனதிலிராததோ மங்கையிளங்கொடியே
பொன்னுருவிநாயகியும் பொற்கொடியந்தான்கேட்டு
கோபம்பெரிதாகிக கொம்பனையுந்தான்சீறி
அவன்-இழிகுலத்தானென்றுசொல்லி இனிதீண்டவொண்ணாதென்று
தேர்ப்பாகனென்றுசொல்லித் தீண்டாமல்தானிருந்தேன்
திருமதுரைக்குள்ளே திருவாவும்வாயிலுள்ளே
கட்டிவரும்பாற்குடநாள் காவலனார்வாசலிலே
விடுவேனோநானவனை வேல்பொருதுங்கண்ணாளே
ஆடைபொருகைபிடித்துக கூந்தல்பொருகைபிடித்து
மாமனுக்குஞ்சொல்வேனென்றாள் மாலைக்கருங்குழலும்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
அத்திபுரத்திற்கு அதுதனைப்பெண்டுகளும்
மாமனுக்குஞ்சொல்வாளோ மாலைக்கருங்குழலே
ஆணைப்பிறந்தவர்கள் அறிந்தாரேயாமாகில்
வெட்கமுமில்லையோ வேல்பொருதுங்கண்ணாளே
போதேவருடந்தடங்கண் பொன்னுருவிநாயகியும்
மாதுநல்லாள்பொன்னுருவி மண்டபஞ்சென்றேறினாள்

பொன்னுருவிகெர்ப்பந்தரித்து மசக்கையானது.

மங்கைநல்லாள்பொன்னுருவி மசக்கைப்பெரிதாகி
அன்னநடையாள ஆழுதளிடம்பள்ளிகொள்வாள
மாதுநல்லபொன்னுருவி மசக்கைகுணமாகி
உப்புஞ்சீர்வேண்டாம உரியில்தயிர்வேண்டாம்
கா[illegible]வேண்டாம் கடையுந்தயிர்வேண்டாம்

எனக்குவிரும்பியது பூசினிக்காய்தானுமிஷ்டம்
ஐயர்குளத்தில் அரிசிவந்தால்சோறிறங்கும்
துய்யர்குளத்தில்தொராவந்தால்சோறிறங்கும்
பிள்ளையார்-கோவில்பிரசாதம் வந்தாலேசோறிறங்கும்
பாண்டிவளநாட்டார் பசலைவந்தால்சோறிறங்கும்
கட்டிலின்மேலே உறங்காளேகட்டழகி
மெத்தையின்மேலே உறங்காளேமெல்லியரும்
கட்டிலுமெத்தையும்வெறுத்ததுமெல்லியர்க்கும்
மெத்தையுங்கட்டிலும வெறுத்ததுமெல்லியற்கும்
முந்தானைப்பாட்டு மொய்குழலும்பள்ளிகொண்டாள்
ஊற்றுத்தண்ணீர்சுரக்கும் உதகமிக்குமப்பாலும்
அகத்திலையுந்தான்சகித்து ஆனந்தவாழ்மாரி
இப்படியாக இலங்கிருக்கும்வேளையிலே

பெருந்திருவாள்தாதியை அழைத்து
தூற்சடையைவரவழைக்கச்
சொன்னது.

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தானறிந்து
தாமக்கருங்குழலாள் தாதியைத்தானழைத்து
தோகைமயிலனையாள் தூற்சடைப்பூநாயகத்தை
அரணாழிக்குள்ளே அழைத்துவாதாதியென்றாள்
தாமக்குழலாளுந் தாதியதுகேட்டு
சொன்னசொல்தவறாமல் சுருக்காகத்தானெழுந்து
போறாளவள்தாதி பொன்னுபரணையின்னே
பொற்பிரப்பங்கோல்பிடித்துப் போறாளவடதாதி
தோகைமயிலனையாள் தூற்சடையாள்மாளிகைசென்றாள்
தோகைமயிலனையும் தூற்சடையாள்மாளிகையில்
அவள்-ஆட்டமுங்கூத்துகளும் ஆரணங்குபார்த்திருந்தாள்
தாமக்குழலாளும தாதியவளுட்புகுந்து
செம்பொன்திரைநீக்கிச் சேரவந்துதெண்டனிட்டாள்
அம்பொன்திரைநீக்கி அழகாகத்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பிப்பெருந்திருந்து
மோதிரமின்னொடி முடிமேலேகைதொழுதாள்
தோகைமயிலனையாள் தூற்சடையாள்தான்பார்த்து
ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்றாள்
ஆர்பணியுமல்ல வடிவேன்றிருப்பணிதான
மாநகரமாளும் மகாராசன்தேவியவள்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்தாதியென்றாள்
நீ-இங்குதான்வந்ததை எனக்கறியக்கூறுமென்றாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளநாயகமும்
அரணாழிக்குள்ளே அழைத்துவரவேணுமென்றாள்

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
நீ-ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்றாள்
மாநகரமாளும் மகாராஜன்றேவியர்க்கு
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தாதியென்றாள்
நீ-இவ்விடம்வந்ததை எனக்கறியச்சொல்லுமென்றாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகமாம்
உன்னை-அரைநாழிகைக்குள்ளே அழைத்துவரச்சொன்னாளென்றாள்
ஆகையினாலே அடியேனழைக்கவந்தேனென்று
வாருமம்மாவென்றுசொல்லி வருந்தியழைக்கவே

பொன்னுருவை பெருந்திருவா
ளிடம்வந்தது.

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
அவள்-ஆகட்டுமென்றுசொல்லி அப்படியேநல்லதென்றாள்
கால்சோரக்கைசோர கட்டழகிமெல்லியரும்
இடையுமநனை சோர்ந்துவரக்கருங்குழலும்
அஞ்சிவழிநடக்க அம்மையிட்டவெள்ளிச்சரம்
கொஞ்சிகொஞ்சிவழிநடந்தாள் தோகைமயிலினையும்
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
மாநகரமாளும் மகாராசன்மாளிகைசென்று
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்முன்னேவந்து
என்னையழைத்தவகை ஏதுவகைசொல்லுமென்றாள்
உன்னையழைத்தது ஒன்றுமக்குறைவுமில்லை
தோகைமயில்கண்ணாள் துற்சடையாளையழைத்தாள்

துற்சடையாள் பொன்னுருவியை
அலங்கரித்து கெற்பந்தரிக்க
தைச்சொன்னது.

அதுக்குள்ளே துற்சடையாள் ஆரணங்குமேதுசொல்வாள்
மல்லிகைப்பூக்கொண்டுவந்து மாதர்க்குமுன்னேவைத்து
இந்தாருமென்றாளே ஏலக்கருங்குழலாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
சரமல்லிப்பூவாலே சந்தோஷமாதருக்கு
குடமல்லிகைப்பூவாலே கொண்டாட்டம்மாதருக்கு
ஒருகையால்வாங்காமல் இருகையால்தான்வாங்கி
அவள்-இருகையால்தான்வாங்கி ஏந்திழையாள்வீற்றிருந்தாள்
தோகைமயிலனையாள் துற்சடையாளைதான்பார்த்து
தேசத்தையாளும் திரியோதிரப்பெருமான்
பூப்போட்டசேலை தந்தாரேயென்தனுக்கு
பொன்போட்டசேலை தந்தாரேயென்தனுக்கு
இருவருமாக சரிபார்ப்போம்வாருமென்று
மேல்சுத்து ஆடைதனை மெல்லியரும்தான்பார்த்தாள்
இதுபுதுமையிதுபுதுமை யாரெனக்குங்கண்டதில்லை

தோகைமயிலணையே துற்சடையேயென்றுசொல்ல
இருவர்மூந்தாணிகளை இழுத்தந்த துற்சடையாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிபட்டாடை
பற்றியிழுத்தாளே பாவைகருங்குழலும
வட்டஸ்தனமழகும் பட்டில்வடிவழகும
கட்டுகைகுழையழகும கையில்வளையழகும்
மார்பில்ஸ்தனமழகும் மசசத்தின்வடிவழகும்
மச்சுவீடுபோலே மலர்ந்தஸ்தனமிரண்டும்
பச்சைநரம்பு பசுநரம்பைத்தான்பார்த்து
தோகைமயிலணையாள் துற்சடையாளகூறலுற்றாள்
அத்திபுரத்திற்கு அதகனைபுத்திரனை
அத்தனைமைந்தர்களும புத்திரராய்தப்பாது
புத்திரரேயென்றுசே பொன்னுருவிதான்கேட்டு
கோபம்பெரிதாகிக் கொம்பனையுங்கூறலுற்றாள
விளம்பிவிளம்பிநீ போடிவிளம்பிநீ
போடிவிளம்பிநீ பொல்லாததுற்சடையாள்
என்று-வீசிநடந்தாளே விசையுடனேபொன்னுருவி
அன்னநடையாள் அழுதுவிடாய்பனிகொண்டாள
துக்கத்தால்மெத்தை தழுவணையும்மேறலுற்றாள்
கண்ணாடிதான்துடைத்து வடிவுகளைப்பார்க்கலுற்றாள்
மார்பில்ஸ்தனமழகும் மட்டற்றவடிவழகும்
மச்சுவீடுபோலே மலர்ந்தஸ்தனமழகும
பச்சைநரம்பு பசுநரம்பைத்தான்பார்த்து
பிள்ளையிதுவென்று பொற்கொடியுந்தானினைத்து
மைந்தரிதுவென்று மங்கையருந்தானினைந்து
கோபம்பெரிதாகிக் கொம்பனையுமப்போது
மனதுகொதிக்கிறதே மாதுநல்லாளப்போது

பொன்னுருவி தன்கணவனுக்கிய
கருணைத்தாவித்தது.

இழிகுலத்தான்பிண்டத்தை இனிதீண்டப்போரேனோ
தீர்ப்பாகன்பிண்டத்தை தீண்டேனிருகையால்
சாதிகெட்டான்பிண்டத்தைச் சற்றாகிலுந்தீண்டேன்
காஞ்சிவளநாட்டாளும் கருணாவிட்டே. னோ
கர்ப்பூரந்தின்று கருவைக்கலைப்பேனென்றாள
காசண்டைதின்று கருவைக்கலைப்பேனென்றாள்
இனியமருந்துதின்று இற்றுவிழக்காணேனென்பாள்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியானைத்தானழைத்தாள்
பிறந்துவளர்ந்து பிராயமிருபதாச்சு
இதுவரைநான்கண்டதில்லை இப்பெரியதுக்கத்தை
ஐயமாரெல்லாம் அடங்கலுமாண்டிருக்க
ஆச்சிமாரெல்லோரும் அடங்கலுமாண்டாகள்

எனக்குவந்ததுக்கத்தை என்னென்றுசொல்லுவேன்
காஞ்சிவளநாடாளும் கருணைரவாகேட்டு
கள்ளந்திருடனைப்போல் கட்டழகன்றேடிவந்து
மாயமருந்தாலே மயக்கினனென்னையவன்
பார்த்தேனேயாமானால்பாணத்தாலேபோட்டிடுவேன்
அறிந்தேனேயாமானால் அம்பாலேபோட்டிடுவேன்
கண்டேனேயாமானால் கண்டதுண்டஞ்செய்திடுவேன்
பிள்ளையுண்டாக்கினான்பொல்லாதபட்டிமகன்

பொன்னுருவி கருவையழிக்க
எத்தனஞ்செய்தது.

பிள்ளைகரைக்கவேணும்பொற்கொடியேஇப்போது
மைந்தரைக்கரைக்கவேணும்மயிலனையேயிப்போது
கற்பூரந்தின்றாலேபிண்டங்களைந்துவிடும்
உந்தனிடத்திலே கற்பூரமுண்டோவென்றாள்
கற்பூரந்தந்தாலே கட்டழகிநானிருப்பேன்
கற்பூரமில்லையென்றால் இப்போதுமாண்டிடுவேன்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவள்தான்கேட்டு
வேணுமென்றகற்பூரம் அழைப்பித்துத்தாரேனென்றாள்
போனாளவள்தாதி பொன்னாபரணமுமாய்
பொற்பிரப்பங்கோல்பிடித்து போறாளவள்தாதி
வீதியும்வீதி தெருவும்பலகடந்தாடி
தேரோடும்வீதி தெருவும்பலகடந்தாடி
மாநகரமாளும் மகாராஜன்றேவியென்றாள்
தேசத்தையாளும் திரியோதிரப்பெருமாள்
அவா-கொலுவிருக்குமேடையிலே சொ[illegible]னையாளவந்துநின்று
சிங்காதனத்திறைத [illegible]
தெண்டனிட்டதாதியாளும் [illegible]
போதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
தேசத்தையாளும் திரியோதிரப்பெருமாள்
நீ-ஆரபெண்ணேதாதி அறியவுரையுமென்றான்
ஆர்பணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
பிறர்பணியுமல்ல பெருமாளுடையபணிதான்
போதேவருந்தடைக்கண்பொன்னுருவிதாதியென்றாள்
நியிங்குவந்ததையெனக்கறியச்சொல்லுமென்றான்

பொன்னுருவிதாதியை அனுப்பி திரி
யோதிரனிடத்தில் கற்பூரம்வாங்கி
வரச்சொன்னது.

உந்தனிடத்திலே கற்பூரம்வேணுமென்றாள்
மாதுநல்லபொன்னுருவி வாங்கிவரசொன்னார்காண்
கற்பூரம்வேணுமென்று கைதொழுதுதெண்டனிட்டாள்
தேசத்தையாளும திரியோதிரன்கேட்டு

கட்டழகிமாதருக்கு கற்பூரமெதுக்கென்றான்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
அது-இனவகையென்று ஏதென்றுநாமறியோம்
மாதுமயிலனையாள் வாங்கிவரச்சொன்னாள்காண்
தேசத்தையாளுந் திரியோதிரனுங்கேட்டு
கட்டழகிமாதருக்குக் கற்பூரம்வேணுமோதான்
வேணுமென்றகற்பூரம் வேண்டியதுதாரேனென்றான்
பெருந்திருவாள திரியோதிரனைக்கண்டு
கெடுக்கவேண்டாமென்றுமறுகத்தது.

பேண்டமயில்கண்ணாள் பெருந்திருவாளோடிவந்து
தேசத்தையாளுந் திரியோதிரன்றானேவந்து
ஊராளும்மன்னா ஒருவார்த்தைநீர்கேளும்
நாடாளும்மன்னா நல்லவார்த்தைநீர்கேளும்
சித்தடிக்குப்பொன்னுருவி நல்லவார்த்தைநீர்கேளும்
ஐய்ந்துதிங்களாச்சுது அங்கதோன்மாதருக்கு
கரும்புஅரும்பிட்டு கஸ்தூரிபூத்ததுபோல்
அலங்கத்தின்கீழ கதலிமுளைத்ததுபோல்
அத்திமரம்பூத்ததுபோல் அன்னநடைபொன்னுருவி
மாதுநல்லபொன்னுருவி மைந்தருமுண்டானாள்
கற்பூரந்தின்றாளே பிண்டந்தரியாது
பிண்டந்தரியாது பொற்கொடியாள்மாண்டிடுவாள்
கற்பூரமில்லையென்று கடுகவுரையுமென்றாள்
திரியோதிரன்பொன்னுருவிகற்பந்தரித்
ததைக்கேள்வியுற்றுமனக்களிப்
படைந்தது.

தேசத்தையாளுந்திரியோதிரனுங்கேட்டு
பூரித்திருந்தானும் பொன்னாபரணமின்ன
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
நானுமறிவேனடி நலமானகாரியத்தை
தாமக்குழலாளைத்தாதியரைத்தாமழைத்து
காஞ்சிநாடாளுங் கருணாகரன்கடையிலே
அங்கேயுண்டுகற்பூரமிங்கில்லையென்றுரைத்தார்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
பொருளவள்தாதி பொன்னாபரணமின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்து பொருளவள்தாதி
பொன்னுருவிதான்கேட்டு
மாளிவந்தது.

காஞ்சிநாடாளுங் கருணருடவீதிவந்தாள்
காஞ்சிநாடாளுங் கருணருடமாளிகையில்
வாசற்படிகாக்கும் வாழ்பாண்டிமன்னவர்கள்
ஆர்பெண்ணேதாதி அறியவுரையுமென்றார்.

(நீ) ஏன்வந்தாய்தாதி எனக்கறியக்கூறுமென்றார்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
வாயைத்திறவாளாம் மறுவார்த்தைபேசாளாம்
மவுனமாய்த்தானிருந்தாள் மாதுகருங்குழலும்
வாசற்படிகாக்கும் மன்னவர்களேதுசொல்வார்
கூடாதமங்கையற்கு கொம்பனையேதாதிகளா
வாழாதமாதுநல்லாள் மயிலனையேதாதிகாள்
கன்னியவள்கற்பழித்த பேய்ச்சிகளோநீங்கள்தான்
பெண்ணவளைவாயழித்த பைங்கொடியேநீங்கள்தான்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதிகளுந்தான்கேட்டு
ஏதொன்றுஞ்சொல்லாமல் ஏலக்கருங்குழலும்
உட்கட்டில்போய்புகுந்தாள் உத்தமியாள்தாதியரும்
காசிவளநாடாளுங் கருணர்பெருமாளும்
கனகமணிக்கட்டிலின்மேல் கருணரும்பள்ளிகொண்டார்
தாமமுடியாளும் தாம்பள்ளிகொண்டாளாம
தோகைமயிலனையாள சுடர்மணிநாயகரும்
உடன்பள்ளிகொண்டிருந்தாள் ஒளியுடையகண்ணாளும்

தாதிகள் கருணைகாசற்பூரங்கேட்டது.

தாமக்குழலாளுந் தாதியருமோடிவந்து
செம்பொன்றிலாதிக்கு சேரவந்துதெண்டனிட்டு
அம்பொன்றிரைக்கீகு அழகாகதெண்டனிட்டாள்
தெண்டனிட்ட தாதி திரும்பஎழுந்திருந்து
மோதிரமின்னமுடிமேலேகைதொழுதாள்
காஞ்சிநாடாளுங் கருணரவர்பார்த்து
(நீ) ஆருடையதாதி அறியவுரையுமென்றான்
தாமக்கருங்குழலாள் தாதியருமேதுசொல்வாள்
ஆருடையதாதியல்ல அடியேன்றிருப்பணிதான்
பேர்பணியுமல்ல பெருமாள்திருப்பணிதான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியென்றாள்
நீயிங்கேவந்தவகை எனக்கறியக்கூறுமென்றான்
ஏன்வந்தாய்தாதி எனக்கறியக்கூறுமென்றான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகிக்கும்
கட்டழகிமாதருக்குக் கற்பூரம்வேணுமென்றாள்
உந்தனிடத்திலே கற்பூரமுண்டென்று
வாங்கிவாச்சொன்னாளாங்கண் மாதுகருங்குழலாள்
காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
திரேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
வாழாதபெண்களுக்கு கற்பூரம்வேண்டியதோ
கூடாதபெண்களுக்குக் கற்பூரம்வேண்டியதோ
என்னையொருபொருட்டாக் கற்பூரம்கேட்டாளோ

எங்கனையுங்கேட்க இங்கனுப்பிவைத்தானோ
(அவனுக்கு) ஏதுக்குக்கற்பூரம் எனக்கறியச்சொல்லுமென்றார்

துற்சடையாள் கருணருக்குச்சொல்லி
கற்பூரங்கொடுக்காமற்றடுத்தது.

தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்கேட்டு
ஊராளுமன்னா ஒருவார்த்தைநீர்கேளும்
நாடாளுமன்னாவொரு நல்வார்த்தைநீர்கேளும்
நானுமிளங்கொடியுஞ் சேரத்துயில்புகுந்தோம்
மாதுநல்லபொன்னுருவி மைந்தருமுண்டானால்
கரும்புகுறும்பிட்டு கஸ்தூரிபூத்தாற்போல்
கல்லாற்றுக்குள்ளே கதலிமுளைத்தாற்போல்
மலடுள்ளவாசலுக்கு மைந்தர்களுமுண்டாச்சு
அம்பலத்துவாசலுக்கு ஆண்பிள்ளைபெற்றிடுவாய்
கற்பூரந்தின்றாலே பிண்டந்தரியாது
பிண்டந்தரியாது பொற்கொடியாள்மாண்டிடுவாள்
செத்துமடிந்திடுவாள் சிவலோகஞ்சேர்ந்திடுவாள்
மாண்டுமடிந்திடுவாள் வைகுண்டஞ்சேர்ந்திடுவாள்
கற்பூரமில்லையென்று கடுகவுரையுமென்றாள்
காசினிநாடாளுங் கருணரவர்கேட்டு
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
நானுமறிவேண்டி நாயரிளம்பிறையே
எனக்குத்தெரியுமோதான் ஏலங்கருங்குழலே
வண்ணமணித்தோளன் பச்சைவடமுதறி
துப்பட்டிதானுதறி துரைமகன்தான்போர்த்து
முத்துமிதியடியாம் மேற்குழல்கள்ரத்தினமாம்
செம்பொன்மிதியடிமேலேறியந்தசீர்கருணர்
தெற்குதெருதாண்டி தேரோடும்வீதிவந்து
கொத்தம்பூமன்னவனை கொடைதானைதானழைத்தார்
கொத்தம்பூமன்னவர்கள் கொடைதானுந்தான்வந்தார்
முத்துக்குடையாம் முழுமாணிக்கப்பொற்குடையாம்
தகைக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பொன்னுங்குடையாம் புகழுடையமுக்குடையாம்
எடுத்துவிரித்தார்கள் எண்ணாயிரங்கொடைகள்
பக்கம்பிடித்தார்கள் பதினாயிரங்குடைகள்
சுற்றிப்பிடித்தார்கள் சூரியனாக்காரர்கள்
ஓமனைக்குடைநடுவில் இருந்தத்தவத்தமனும்
பூச்சக்கிரகுடைநடுவில் இருந்தத்தபுண்ணியனும்

கருணமகாராஜன்சாம்புவனை அழைத்துசகலவர்த்தகரும் கற்பூ
விற்காதிருக்கும்படி பறைசாற்றச்சொன்னது.

பறையறையும்மன்னவனை சாம்புவனைதானழைத்தான்

பறையறையுமன்னவர்கள் சாம்புவர்களோடிவந்து
தூரவிருந்து தொழுதிரங்கித்தெண்டனிட்டு
என்னையழைத்தபணி ஏதுபணியெம்பெருமாள்
என்றதுகேட்டு யேதுசொல்வார்கருணாரவர்
உன்னையழைத்தது ஒன்றுக்குறைவுமில்லை
அத்திபுரத்தில் அறுபதுகடைகளுண்டே
அந்தக்கடை தனிலே ஆறொருவர்கற்பூரம்
விற்றார்களானக்கால் வீரசொர்க்கஞ்சேர்த்திடுவேன்
ஆரொருவர்கற்பூரம் கொண்டதையுண்டானால்
ஊருக்குமேற்கே யுயிர்கழுவுபோட்டிடுவேன்
தாமமணிகட்டி தரித்துவைப்பேன்பூமுடியை
காக்காடேமூக்கறிந்து நகர்விட்டுவோட்டிவைப்பேன்
அப்படிக்கென்று ஆசுமுழக்குமென்றாள்

சகலராசருமறியும்படிச் சாம்புவர்கள்
பறையறைந்தது.

பறையறையுமன்னவர்கள் சாம்புவர்கள்தான்கேட்டு
அருளானருமென்னையா அப்படிக்கேயாகுதென்று
வெள்ளியால்பறைகொண்டு வெண்கலத்தால்தேர்தூணி
யானையின்மேலேவைத்து அலங்காரம்போடலுற்றார்
அத்திபுரத்துப் பெருந்தெருவேவந்துநின்று
அடித்தார்தமுக்கோசை அந்நகரில்தானகேட்டு
சிலமன்னரெல்லாரும் திடுக்கிட்டெழுந்திருந்து
வர்த்தகரும்செட்டிகளும் வருத்தமுடன்தானெழுந்து
கடைக்காரரெல்லாம் கனமுடனேதானெழுந்து
என்னமோகாரணமோ ஏதொன்றுநாமறியோம்
பறையறையுமன்னர்களும் சாம்புவருந்தான்கேட்டு
காஞ்சிநாடாளுங் கருணரிடஉத்திரவு
இராஜாக்கள்காரியங்கள் நாமறியக்கூடாது
கஸ்திரியர்காரியங்கள் கலக்கம்வெளிப்படுமோ
இந்த-அத்திபுரத்திலே அறுபத்திரண்டுகடை
ஆறொருவர்கற்பூரம் விற்றதேயுண்டானால்
ஆறொருவர்கற்பூரம் கொண்டதேயுண்டானால்
ஊருக்குமேற்கே உயிர்கழுவுபோட்டிடுவேன்
தாமமணிகட்டி தறித்துவைப்பேன்பூமியிலே
காக்கோடேமூக்கறிந்து நகரவிட்டோட்டிடுவேன்
அப்படிக்கென்று அறைந்தேன்தமுக்கென்றான்
கடைக்காரர்தான்கேட்டு கலங்கிமனந்தளர்ந்து
கற்பூரச்சாக்கையெல்லாம்கட்டியொருபுறமாய்
கட்டியொருபுறமாய்க் கடலிலேவிட்டெறிந்தார்

இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
தாமக்குழலாளுந் தாதியவளேதுசெய்தாள்
தாமக்குழலாளுந் தலைவிரித்தோடலுற்றாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிகைசென்றாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
வாசற்படிபிடித்து மயிலனையும்பார்த்திருந்தாள்
தாமக்குழலாளுந் தாதிகளுமுன்னேவந்து
கற்பூரத்துக்குப்பட்ட கலையெல்லாம்போதுமென்றாள்
எந்தனுக்குங்கிட்டாது ஏலக்கருங்குழலே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
நீ-தாதிபொருத்தி தாமழிப்பாயென்றறியேன்
மோப்பிபொருந்தி முன்னுலைப்பாயென்றறியேன்
அன்னநடையாள் மாழுதவிட்டம்பள்ளிகொண்டாள்
கற்பூரங்கிட்டலையோ காலையாதுபட்டணத்தில்
என்றுமவள்சொல்லி யிருக்கிறவேளையிலே

பொன்னுருவிதாதிகளை மாங்காய்க்கேட்டு
இன்மேல்இல்லையென்றுரைத்தது.

மயிலனையாள்பொன்னுருவி மசக்கைக்குணமாகி
மாதுநல்லாள்பொன்னுருவி மாங்காய்மனதாகி
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியைத்தானழைத்து
எந்தன்தனக்கு ஒருமாங்காய்வேணுமென்றாள்
தாமக்குழலாளுந் தாதியருந்தான்கேட்டு
நான்-கற்பூரங்கொள்ள கடையெல்லாஞ்சுத்திவந்தேன்
காஞ்சிமாநகருங் கருணரவர்பார்த்து
கடைகள்கடைத்தெருவில் கட்டியடித்தாரே
கற்பூரத்திற்குப்பட்ட கலையெல்லாம்போதுமம்மா
மாங்காயுங்கிட்டாது மாலைக்கருங்குழலே
உன்-மாமிபெருந்திருவாள் மயிலனையகேட்டாலே
வேண்டுமென்றமாங்கனிகள் வேணதுதான்தருவாள்
அங்கேநீகேளுமென்றாள் ஆரணங்குதாதியரும்

பொன்னுருவிபெருந்திருவாளை
மாங்கனிகேட்டது.

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
மாமியார்மாளிகைக்கு வாறாள்மயிலனையாள்
மாமியுங்கண்டங்கே வாராள்மயிலனையாள்
இங்கேயிருமென்று இனிகட்டும்தட்டலுற்றாள்
தட்டுங்குழலுக்குந் தார்குழலாள்வீற்றிருந்தாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்பார்த்து
வேர்க்கவிரிவிரிக்க வந்தஅவசரமேன்
உந்தனொருகாரியத்தை வகைதெரிந்துகூறுமென்றாள்

போதேவருந்தடங்கண் பொன்னுருவிகூறுவாள்
ஆரங்கந்தானடி அம்மாநீர்தானடி
பந்தாடிசெண்டாடி பள்ளாங்குழியாடி
ஓலைகால்மண்டபத்தில் உஞ்சல்கயிருடி
பளிங்குமாமண்டபத்தில் பைங்கிளிநான்வீற்றிருந்தேன்
ஏதோவிடாபெரிசாய் மாங்காய்யானதாச்சு
உந்தனிடத்திலே ஒருமாங்காய்வேணுமென்றாள்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
வேண்டுமென்றமாங்கனிகள் அழைப்பித்துதாரேனென்றாள்
தோகைமயிலனையாள் துச்சனையாளோடிவந்து
ஊராளுமாமி ஒருவார்த்தைநீர்கேளும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
மாங்காயுங்கேட்டாளே மாலைக்கருங்குழலும
ஒருமாங்காய்க்கித்தானாலும் மகனோடேபேசவைப்போம்
மாங்கனிக்குத்தானாக மகனுடன்பேசவைப்போம
மாங்காயுமில்லையென்று மாதற்குறையுமென்றாள்

பெருந்திருவாள் பொன்னுருவினைய
உன்மாமனை மாங்கனிகேளே
ன்றுசொன்னது

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
அப்படியேசம்மதிக்கதான் ஆரணங்குமப்பொழுது
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியை
உங்களுமாமாவைகேட்டாலே தருவாரேமாங்கனியும்
அங்கேயுண்டுமாங்கனிகள் இங்கில்லையென்றுரைத்தாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
மாமனார்மாளிகைக்கு வாராள்மயில்போலே
தேசத்தழகன் திரியோதிரப்பெருமாள்
காஞ்சிநாடாளுங் கருணருடன்கூட
சாயம்புமேனி சகுனியவன்கூட
சொக்கட்டான்சூது சதிரங்கந்தானடி
போகின்றமன்னருக்குப் போகவிடைகொடுத்து
அங்கிருந்தமன்னர்களை அனுப்பிவிடைகொடுத்து
தனியாகவீற்றிருந்தான் தாமமுடியானும்

பொன்னுருவிதிரியோதிரனை
மாங்கனிகேட்டது.

போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியும
மேமனெதிரில்வந்து மாலைக்கருங்குழலும்
வணங்காமுடியும் வயிரத்திரைகுழலாள்
மாங்காய்க்குத்தானாக மாமாவைதெண்டனிட்டாள்

தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
என்னவென்று தெண்டனிட்டாய் பிள்ளைகளைப்பெற்றிடுவாய்
தெண்டனிட்டகாரியம் தெரியவுரையுமென்றாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிகூறுவாள்
ஆரங்கத்தாளுடி அம்மானைத்தாளுடி
பந்தடிசெண்டாடி பள்ளாங்குழியாடி
ஓலைக்கால்மண்டபத்தில் உஞ்சல்காயிருடி
பளிங்குமாமண்டபத்தில் பைங்கிளிநான்வீற்றிருந்தேன்
ஏதோவிடாய்பெரிதாய் ஒருமாங்காய்வேணுமென்றாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்தான்கேட்டு
மாங்கனிகேட்கவந்த மங்கையரைத்தான்பார்த்து
இத்தனைநாளில்லாதே இதுவெந்நாளன்றியிலே
நீமாங்காய்க்கேட்க காரியமென்மங்கையரே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
உப்பஞ்சீர்வேண்டலையே உரியில்தயிர்வேண்டலையே
காட்டுருசிவேண்டினால் கச்சாயம்வேண்டில்லை
ஏதோவிடாய்பெரிசாய் ஒருமாங்காய்மனதாகி
ஒருமாங்காய்வேணுமென்று உத்தமியுந்தெண்டனிட்டாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்தான்கேட்டு
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
வேணுமென்றமாங்கனிகள் அழைத்துநான்தாரேனென்றார்

பெருந்திருவாள் திரியோதிரனை பொ
ன்னுருவிக்குமாங்கனிகொ
டுக்கவேண்டாமென்
சொன்னது.

பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளோடிவந்து
மானைக்கொண்ட மகராஜன்முன்னேவந்து
அவன்-கண்சாடைகாட்டினால் கமலப்பூநாயகியாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
தனியேயெழுந்துவந்தான் தாமமுடியானும்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகமும்
மறைவாகவந்தானே மாலைக்கருங்குழலும்
தேசத்தழகன் திரியோதிரனுடனே
மாலைமுடியாளும் மயிலனையுங்கூறலுற்றாள்
ஊராளுமன்னா ஒருவார்த்தைநீர்கேளும்
நாடாளுமன்னா நல்வார்த்தைநீர்கேளும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியும்
மாங்காயுங்கேட்டாளே மாலைக்கருங்குழலும்
மாங்காயுமில்லையென்று மன்னவரோநீருரைத்தால்
மாங்காய்க்குத்தானாக மகனோடேபேசவைப்போம்

ஒரு-மாங்கனிக்குத்தானாகக் கருணாருடன்பேசவைப்போம்
மாங்காயுமில்லையென்று மன்னவரோசொல்லுமென்றாள்
தேசத்தழகன் திரியோதிரன்தான்கேட்டு
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாமபூரித்து
அப்படிக்கேசெய்வேனென்றான் ஆனந்தவாழ்மார்பன்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து

திரியோதிரன் மாங்கனியில்லையென்று சொல்ல
பொன்னுருவி விசனமடைந்தது.

போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
காஞ்சிநாடாளுங் கருணாருடசோலையிலே
அங்கேயுண்டுமாங்கனிக ளிங்கில்லையென்றுரைத்தார்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
ஊராளுமாமா ஒருமாங்காய்கிட்டாதோ
நாடாளுமாமா நல்மாங்காய்கிட்டாதோ
என்-ஐயமார்பாண்டியர்கள் அரசாளும்நாளையிலே
என்-ஆச்சிமாரெல்லோரும் இருக்கின்றநாளையிலே
சாக்கடைகள்தோறும் சரிந்துவிழுமாங்கனிகள்
அடித்துப்பழங்கொடுக்க ஆருண்டுவையகத்தில்
திட்டப்பழங்கொடுக்கப் பெண்காக்காய்யற்றுதே
என்றுசொல்லிமங்கையாளும் ஏங்கிப்புலம்பலுற்றாள்
கூவியழுதாளே கொம்பிணைகிளிபோலே
கோபித்துத்தானழுதாள் கோயிலன்னப்போலாக
வாய்திறந்துதானழுதாள் மாதுநல்லபொன்னுருவி

பொன்னுருவி விசனப் படுவதைக்
கண்டு திரியோதிரன்மாங்கனி
கொடுக்கிறேனென்றது.

தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுத்தானெழுந்து
மன்னன்மனஞ்சலித்து ஒருவார்த்தையெடுத்துரைப்பான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமே
நாளை-மத்தியானவேளைக்கு வந்தாயேயாமானால்
வேணுமென்றமாங்கனிகள் அழைப்பித்துத்தாரேனென்றான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
அவள்-ஆகட்டுமென்றுசொல்லி அப்படிக்கேநல்லதென்றாள்
சந்தோஷப்பட்டாள் சரீரங்கள்பூரித்தாள்
அமர்ந்தநடையுடனே ஆனந்தவாழ்மாரி
அவள்-அன்னநடையுமே ஆலித்துப்பள்ளிகொள்ள

தங்கத்தால்மெத்தை தழுவணையின்மீதுசெல்வாள்
மாதுநல்லபொன்னுருவி மசக்கைகுணமாகி
மாதுநல்லபொன்னுருவி மாங்காய்மனதாகி
இப்படியாக இருக்கின்றவேளையிலே
பொழுதுவிடிந்தது பகலோனும்வந்துதித்தார்
கங்குல்விடிந்தது கதிரோனுமவந்துதித்தார்
ஈஸ்வரனார்கோவிலுக்கு திருகாப்புசென்றது
தேசத்தழகன் திரியோகிரப்பெருமான்
பள்ளிவிட்டுக்கீழிறங்கி பகையச்சீரகண்ணாள்
மாலைமுடியாளும் மல்லிகைப்பூவின்மதநி
பாளைவிரித்தா பட்டாடைமேல்சாத்தி
முத்துமிதியடியைத்தொட்டுமேநடந்து
அரண்மனையேழுகட்டும் அம்பாகத்தான்கடந்து
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
வைகைகரைதனில் வந்தாரேயப்பொழுது
முல்லைபூமொட்டுதனை பதித்தாப்போல்பல்விளக்கி
பாலைகொண்டுபல்விளக்கி நூலைகொண்டுவழித்து
தீர்த்தநீர்வாங்கி திருவாயுங்கொப்பளித்து
வசந்தநீர்வாங்கி மகிழ்முகமுஞ்சுத்திசெய்து
சிவசிவாவென்று திருநீறுங்காப்பணிந்து
அரகராவென்று அணிந்தாரேவெண்ணீறா
பாளைவிரித்தாற்போல் பட்டாடைமேல்போர்த்தி
முத்துமிதியடியை தொட்டுமேநடந்து
வசந்தமணிமண்டபத்தில் மன்னவரெழுந்தருள
அருகிலிருந்தமன்னவர்கள் அவசரமேயோடிவந்து
இட்டார்சிங்காதனங்கள் எழிலானமன்னவர்க்கு
இட்டசிங்காதனத்தில் எழில்மன்னன்வீற்றிருந்து
திரியோகிரன் தோட்டக்காரனை அழைத்து
மாங்கனிபறித்துவரச்சொன்னது
மாஞ்சோலைதோட்டத்து மாதலரைத்தானழைத்தான்
மாஞ்சோலைதோட்டத்து மன்னவரும்ஓடிவந்து
சிங்காதனத்திற்கு முன்பாகதெண்டனிட்டு
என்னையழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்றான்
தேசத்தையாளும் திரியோகிரன்தான்கேட்டு
உன்னையழைத்தது ஒன்றுக்குமறவுமில்லை
மாங்கனிதோட்டத்தில் மன்னவரேபோய்புகுந்து
தினுசுக்கொருமாங்கனியை தீவிரமாய்நீர்பறித்து
கூடையில்மாங்கனியை கொற்றவரேகொடுத்து
கடுகெனவேவாருமென்று கட்டளையிட்டார்கள்
மாஞ்சோலைகாக்கின்ற மன்னவருந்தான்கேட்டு

தட்டியெழும்புவான் தாமக்குழலாளும்
பள்ளிகொள்ளுமென்றனே பங்கயனேர்கண்ணாளும்
காஞ்சிநாடாளுங் கருணைரவாகேட்டு
சந்தோஷப்பட்டார் சரீரங்கள்பூரித்தார்

பெருந்திருவாள கருணனை திரியோதிர
னைபபோலசிவிக்ரித்துமூககாட்டிடு
படுததிருககச்சொன்னது.

அறுபதுநால்முழக்கி லழகானபச்சைவடம்
மூக்காடுபோட்டு மூடிமன்னன்பள்ளிகொண்டான்
துப்பட்டிபோட்டு துரைமன்னன்பள்ளிகொண்டான்
இப்படியாக விருக்கின்றவேளையிலே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
மாமனாவாசலுக்கு வந்துநுழைந்தாளே
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளைதானபார்த்து
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமும்
மாங்காயுந்தாரோமென்று மன்னாவரச்சொன்னார்
மாங்கனிக்காக வரசொன்னார் உனமாமா
மாமாவுனனைக்கேயென்றாள பாங்ககயங்குழலும்

பொன்னுருவி திரியோதிரனெங்கேயெ
ன்றுபெருந்திருவாளைக்கேட்டது.

பேடையமில்கண்ணாள் பெருந்திருவாள் கூறுவாள்
தலைநோவுகண்டுதென்று தாமமுடியாளும்
மூக்காடுபோட்டு மூடிமன்னாபள்ளிகொண்டார்
துப்பட்டிபோர்த்து துரைமன்னாபள்ளிகொண்டார்
வந்தசேனங்களெல்லாம் வாசலிலேகாததிருக்க
போசனங்களுணணவில்லை பொற்கொடியேயுன்மாமா
தட்டியெழுப்புமென்றாள தாமக்கருங்குழலும

பொன்னுருவி மாமனைத்தட்டி
எழுப்பினது

அவள்-ஆகட்டுமென்று சொல்லி அப்படிக்கேநல்லதென்று
மன்னவனார்தன்னருகில் வந்தாளேமெல்லியரும்
மாமா ஆடல்அடிசில் ஆறியிருக்கிறது
பட்டணத்துவெள்ளானை பஞ்சாங்கங்கேட்கவில்லை
பஞ்சாங்கம்கேட்கவில்லை பாலமுர்தம்கேட்கவில்லை
மதிப்பிப்பெரிசனைய மாமாவெழுந்திரென்றாள்
காஞ்சிநாடாளும கருணைரவர்கேட்டு
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைத்தான்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து

மாமி-உடைய புகுலுக்குது உத்தமரும்பேசவில்லை
மற்றுமொருதரம் தட்டியெழுப்புமென்றாள்
மாமா-ஆடல் அடிசல் ஆறியிருக்கிறது
பட்டணத்துவெள்ளானை பஞ்சாங்கக்கேட்கவில்லை
பஞ்சாங்கங்கேட்கவில்லை பாலமுர்தமுண்ணவில்லை
நம்மோடேராஜாக்கள் பசியோடுகாத்திருக்க
சரியொத்தராசாக்கள் தானைக்கேவிற்றிருக்க
துய்யர்குலத்தில் துரோணருங்காத்திருக்க
எல்லாருங்காத்திருக்க எனமாமா எழுந்திரென்றாள்
தட்டியெழுப்பினாள் தாயகக்குங்குழலா
முகங்கொடுக்கி முடிமன்னா தான்பார்த்தார்
துப்பட்டிநீக்கி துரைமன்னர்தான்பார்த்தார்

பொன்னுருவிகருணனைப்பார்த்து அந்த
ப்புரத்தில் ஒளித்துக்கொண்டது.

போதேவருந்தங்கண் பொன்னுருவிதான்பார்த்து
கருணர்திருமுகமுங் கலசகுண்டங்கண்டவுடன்
திக்கென்றெழுந்திருந்து தேனைகருங்குழலாள்
தேனாருங்குழலுமநிமிஷிலன்றோடலுற்றாள்
மஞ்சனீராலயிலே மாதரவள்போயபுகுந்தாள்
காஞ்சிநாடாளுங் கருணனெழுந்திருந்து
அவள்-கூடத்தொடர்ந்தாரே வெற்றிவனார் வீரியரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
பார்த்தார்பலகாலும் பங்கயஞ்சீர்கண்ணனை

பொன்னுருவி கருணனைப்பார்த்தபோது
போது மூர்ச்சையாகிவிழுந்தது

அவள்-கைகால்கள்சோர்ந்து களையாயிருப்பதை
கண்ணாலேகண்டாரே ரேசட்டமுகரப்பொழுது
அவள்-உள்ளமும்பூரித்து உடம்புமிடவிடத்து
மாங்காய்க்குத்தானாக மாண்டாளே பொன்னுருவி
மாங்காய்க்குத்தானாகச்செத்தாளே பொன்னுருவி
செத்தாடிபொன்னுருவி வாடிபெருந்திருவாள்
மாண்டாடிபொன்னுருவி வாடிபெருந்திருவாள்
கூவியழைத்தாரே கொற்றமுடிராஜாவும்
அழைத்தகொருசத்தத்தைத ஆச்சியருந்தான்கேட்டு
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
அவள்-உள்ளமுருகி உடம்புமிடவிடத்து
ஓட்டம்பொருந்தினையாய் ஓடிவந்துமுன்னேநின்றாள்
தோகைமயிலனையாள் துற்சடையாளோடிவந்து
இருவருங்கூடியே வெதிராகவந்துநின்றார்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகரும்
காஞ்சிநாட்டரசும் கருணருடனேதுசொல்வார்

உன்னையழைத்தது ஒன்றுங்குறையுமில்லை
வகைக்கொருமாங்கனியை வரிசையாய்த்தான் பறித்து
தினுசுக்கொருகனியைத் திரமாய்ப் பறித்து
கோணியில் மாங்கனியை கொட்டி மூட்டைகட்டி
போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு
அவளுடைய மாளிகைக்கு அனுப்பவேண்டுமென்றான்
மாங்கனிக்காவலர்கள் மன்னவர்கள் தான்கேட்டு
அவர்கள்-ஆகட்டுமென்று சொல்லி அக்ஷணமே தானடந்து
மாங்கனிச்சோலையிலே மன்னவருட்புகுந்து
கொம்பில்பழுத்திருக்கும் கோதுபடா மாங்கனியும்
கிளைகளின் ஓரத்தில் காய்த்திருக்கும் மாங்கனிகள்
வகைக்கொருமாங்கனியை வகைவகையாய்த்தான் பறித்தார்
தினுசுக்கொருகனியைத் திரமாய்த்தான் பறித்தார்
கோணியில்கொட்டி மூட்டைகட்டினார் காவலரும்
தூக்கியெடுத்தார்கள் துரிதமாய்ச் சுமந்தார்
காஞ்சிநாடாளும் கருணரும் பின்தொடர்ந்தார்
மாந்தோப்பைவிட்டு மன்னவர்கள் வாரார்கள்
தெத்துத்தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
மாடோடும் வீதிவிட்டு மன்னவர்கள் வாரார்கள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி மாளிகைவந்தார்
காஞ்சிநாடாளும் கருணர் பெருமாளும்
மாணிக்கத்தூணருகே மறைவாகத்தானிருந்தார்
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே

காவலர் பொன்னுருவிக்கு மாங்கனி
கொண்டுவந்து கொடுத்தது

போதேவருந்தடங்கண் பொன்னுருவி நாயகிமுன்
கொண்டுவந்து கொட்டினார்கள் கொற்றவரும் மாங்கனியை
போதேவருந்தடங்கண் பொன்னுருவி தான்பார்த்து
விழியாதகண்கள் ரெண்டும் விழித்துமே தான்பார்த்து
திறவாதகண்கள் ரெண்டும் திறந்துமலரப்பார்த்து
இதுயேது மாங்கனிகள் எனக்கறியச்சொல்லுமென்றாள்
ஆர்தந்தார் மாங்கனிகள் அறியவுரையுமென்றாள்

காவலர்கள் பொன்னுருவிக்கு கருணர்
கொடுத்த மாங்கனியென்று
சொன்னது.

அப்போது அவர்கள் அடிவணங்கிச்சொல்லுகிறார்
காஞ்சிநாடாளும் கருணரவர் கொடுத்தார்
இந்தாருமென்று சொல்லி எடுத்துக்கொடுத்தார்கள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி தான்கேட்டு
கதித்துத்தலைவண்டி கண்கள் பொறிபறக்க
நீல்விழிக்கண்கள் நெருப்புத்தணலாக

பற்றியநாகம் பவளம்போல்கண்சிவந்து
இழித்துலத்தான் மாங்காயைத்தீண்டவேநீயுண்டோ
தேர்ப்பாகன்மாங்காயைத் தீண்டேனிருகையால்
சாதிகேட்டான்மாங்காயைக் கண்ணாலேபார்ப்பதுண்டோ
என்று-வீசியபத்தாளே வேல்பொருதுங்கண்ணுமெ
எடுத்துமெறிந்தாளோ இருகையால்மாங்கனியை
பார்த்துமவள்பறக்கடித்தாள் பைங்கிளியாளப்பொழுது
எடுத்துநடவுமென்றாள் ஏலக்கருங்குழலும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

பொன்னுருவி கர்ணன்கொடுத்த மாங்கனி
வேண்டாமென்று காவலாவசம் அனுப்பிவிட்டது.

அப்போ-காஞ்சிநாடாளும்கர்ணனவர்பார்த்து
கதித்துத்தணலடிக்க கண்களபொறிபறக்க
நீலவிழிக்கண்கள் நெருப்புத்தணலாகி
நெற்றியபுருவம நெருப்பாயனலபறந்து
பற்றியநாகம பவளமபோல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகமாய்
ஸ்ரீழுதவாகொள்ள திருமாலனவாயிலுளளோ
கட்டிவரும்பாமருங்கள காவலாகள்வாசலிலே
இத்தனையுங்கண்டிருந்தாள் ஏலங்கமழுங்குழலாள்
நான்-அனுப்பினமாங்கனியை ஆணங்கதான்வேண்டாள்
மன்னவரைத்தானழைத்து மாங்கனியைத்தாக்குமென்றாள்
அப்போதுதூதுவர்கள் அவசரமாயத்தானெழுந்து
மாங்கனியைத்தானெடுத்து மன்னனாட்டுக்குமற்றா
தங்களதங்களமாளிகையில் தானடந்தார்தூதுவர்கள்
இப்படியாக இவரிருக்குமவேளையிலே

பொன்னுருவி தாதியையழைத்து மருமானுக்குப்
போய மாங்கனி கொண்டுவரச்சொன்னது.

போதேவருந்தாங்கன பொன்னுருவிநாயகியும்
மாதுநல்லாளபொன்னுருவி மைக்கண்ணுக்குணங்கி
மாங்காயமனதாகி மாதுநல்லாளபொன்னுருவி
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியைத்தானழைத்து
மாங்காயளவிருந்து மாங்கனிபோல்பொன்னெடுத்து
பொன்னையெடுத்து புறப்படத்தானிருந்தாள்
அப்போது-இவ்வூரைவிட்டு மறுவூருபோகுமென்றாள்
தாமக்கருங்குழலாள் தாதியவளகேட்டு
எலுமிச்சம்பூப்பட்டு இழுத்துவரிந்துடுத்தி
பஞ்சவர்ணப்பூப்பட்டுப் பாங்கிவரிந்துகட்டி
நமத்துளிர்பட்டெடுத்து நன்றாமவரிந்துடுத்தி
பொன்னெடுத்துக்கைபிடித்து புறப்பட்டாள்தாதியவள்
பெறாதவள்தாதி பொன்னுபரணமின்ன

மாங்காயென்றுரைத்தசொல்லை மன்னவனோர்தான்கேட்டால்
வாயைக்கிழித்திடுவார் மண்டையுடைத்திடுவார்
எழுந்தோடவுமென்று எதிரிநாத்தலுற்றான்
இந்தசொல்சொன்னமட்டும் இனியிருக்கலாகாது

தாதி கருணருடையதோட்டத்தில் ஒருமாங்காய்திருடிவந்து

பொன்னுருவிக்குக் கொடுத்தது.

அப்போதுதாதியவள் ஆரணங்குநாயகியாள்
ஓடிவரும்வேகத்திலே ஒருமாங்காய்தான்பறித்தாள்
ஒருமாங்காய்தான்பறித்து உள்மடியில்தான்சொருகி
மாங்கனிச்சோலையை தாண்டினாள்மங்கையரும்
போதேவருந்தடக்கண் பொன்னுருவிமானிசென்றாள்
கைகால்கள்சுத்திசெய்துக் கட்டழகிவுட்புகுந்தாள்
மாங்காய்கறிசமைக்க மாதுநல்லாள்ஏதுசெய்வாள்
மாலைக்குழலாளும் மாங்காயதுதிரித்து
வுப்புக்கொருகீத்து திருக்கினாள்மங்கையருந்
கடுகுக்கொருகீத்து கலந்தாப்பிசிறினாள்
மாங்காய்க்குவெந்தயங்கள் மயிலனையாள்சொப்பனிட்டாள்
பத்துவிதப்பச்சடியும் பதமாய்த்திருக்கினாள்
குழம்புபொறிககறியும் கூட்டமுதுதான்செய்தாள்
தயிர்சேர்ந்தபச்சடியும் தாளித்தாள்தையலரும்
புளிசேர்ந்தபச்சடியும் செய்தாளேபொற்கொடியும்
அவியல்துவையலது அவித்தாளேஆரணங்கு
தித்திப்புமாங்கனிகள் தெருட்டும்படிசெய்து
போதேவருந்தடக்கண் பொன்னுருவிமுன்னேவந்து
மாங்காய்சமைத்தாச்சு மாதரிளங்கொடியே
போசனங்களுண்ணுதற்குப் பொறகொடியேவாருமென்றாள்

தாதிகள் பொன்னுருவிக்குப் போசனஞ்

சமைத்துப்போட்டது

அந்தவுரைகேட்டு ஆரணங்குபொன்னுருவி
திட்டெனவெழுந்திருந்து தேனேகருங்குழலாள்
மஞ்சநீர்சாலையிலே மயிலனையும்வந்துநின்று
காலோடுகையும் கனிவாயுஞ்சுத்திசெய்து
மாரோடுதோளும் மதிமுகமுஞ்சுத்திபண்ணி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்புமிட்டு
பத்திரம்போட்டுப் பகவானைக்கைதொழுது
தும்பைமலர்போட்டுச் சூரியனைப்பூசைபண்ணி
சுத்திவலமவந்து செவிதனிலேபூச்சொருகி
அம்மனென்னுமாது அரண்மனையில்சென்றாள்காண்

அங்கொருநாளி அறிவுடையானோடிவந்து
வட்டமணைபோட்டு வண்மையுடன்குந்தவைத்து
வாழையிலைபோட்டு மணிசசெம்புநீர்தெளித்து
தும்பைமலர்போல சொரிசகாளேபோசனங்கள
ஆயிரத்தெட்டுவிதமா சமைத்திருந்தமாங்கனியை
வைத்தவிதமாய்த்தானெடுத்து வட்டித்தாள்மாதருக்கு
போதேவந்தநாசன் பொன்னுருவிநாயகியாள்
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
சந்தோஷப்பட்டு சரீரங்களபூரித்து
தொண்ணூறுநாட்களுண்ணாதபோசனத்தை
மாங்காயைத்தான்பார்த்து வாரியமுதுகொண்டாள்
வாரியமுதுகொண்டு வண்ணமுகசுத்திபண்ணி
கைகாலைசுத்திபண்ணி கனிவாயுங்கொப்பளித்து
வாயுகொண்டவாயதுடைத்து வசததமியாளபோயநடந்தாள்
கட்டிலின்மேல் படுத்து கலையாறுகட்டழகி
தலையணைபந்தாலோ தாயகருங்குழலாள்
நினைவுறாதுயில்லோ நித்திரைசெயயலுற்றாள்
இப்படியாக இவளிருக்குமவேளையிலே

கருணை பொன்னுருவிக்கு மாங்கனிகிடைத்ததோ யில்லை
யென்கிற சந்தேகந்தெளியும்படி அவனுடையமாளிகை
வந்துமறைந்திருந்ததாகிறது.

காஞ்சிநாடாளும் கருணாசிகாமணியும்
மாங்கனிதன வலைக்க கணமெல்லா மமன்னவனும்
போதேவந்தநாசன் பொன்னுருவியாளிடஞ்சென்று
பள்ளியறைமண்டபத்தைச் சுற்றியேபார்க்கலுற்றான்
அந்தச்சமயத்தில் ஆரணங்கு மாதவள
உண்ணுதமாங்கனியைத் தின்னபடியாலே
காணுதமாங்கனியைக் கண்டபடியாலே
குடலைப்பிரட்டி எடுத்தாளேவாங்கியவள
அவளெடுத்தவாந்தி அன்பானமாங்கனியை
காஞ்சிநாடாளும் கருணையாபார்த்து
தன்னிலங்கையினாலும் அப்பட்டிதானெடுத்து
வாயிலெடுத்ததெல்லாம் வாங்கினான்தன்கையிலே
வாங்கிநடந்தானே மகாராசனமாளிகைக்கு
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்முன்னேவந்து
ஆரணங்கு ஆச்சியமோ அன்னையுடைதேவியமோ

கருணை பெருந்திருவாளைக்கண்டு பொன்னுருவிக்கு ம
காய்கொடுத்தவர் ஆரென்றுகேட்டது.

மாதரின்கொடிக்கு மாங்காய்க்கொடுத்தவரார்

ஆர்கொடுத்தார் மாங்கனிகள் ஆச்சியரோ நீதுரையும்
கொடுத்தவனைக்கண்டாலே கொல்லத்துணிந்திடுவேன்
ஊருக்குமேற்கே உயிர்க்கழுவில்போட்டிடுவேன்
தாமமணிகட்டித் தறித்திடுவேன் பூமுடியை
அந்தவுரைகேட்டு ஆரணங்கும் ஏதுசொல்வாள்

பெருந்திருவாள் நான்கொடுக்கவில்லையென்று
கருணருக்குச் சொல்வது.

தேசத்தையாளும் திரிபோதிரப்பெருமான்
அன்றொருநாள்வேளையிலே அழைத்தந்தகாவலனை
பாகையைக்கொண்டு வச்சொல்லிமன்னவரும்
கட்டிவின்கிழாகக் கொட்டினை மாங்கனியை
மாங்கனிக்காகவல்லோ மாதரிளங்கொடியாள்
அவளொன்றுஉன்னை எழுப்பினாளாரணங்கு
உந்தன்முகம்கண்டவுடனே ஓடியவள்பதுங்க
மஞ்சணீர்சாலையிலே மாதரவள்சேர்ந்துவிட்டாள்
அன்றுமுதலின்றொருநாள் ஆரணங்குமாதருக்கு
மாங்காய்கள்கொடுத்ததியேன் மாதரிளங்கொடிக்கு
கொடுத்ததேவுண்டானால் கொல்லத்துணிந்துவிடும
தாமமணிக்கட்டி தறித்துவிடும்பூமுடியை
என்றுமவளுரைத்து இருந்தாளே பெருந்திருவாள்
காஞ்சிநாடாளும் கருணரவர்கேட்டு
மாங்கனிசோலையிலே வந்தார்கருணரும்

கருணர்தோட்டக்காரனை அழைத்துப்பொன்னுருவிக்கு மாங்க
கொடுத்தவராரென்றுகேட்டது.

மாங்கனிக்காவலனை மன்னவனும்தானழைத்தார்
ஆயிரம்பேர்காவலர்கள் அன்பாகஓடிவந்தார்
கருணரடிவணங்கிக் கட்டழகனிற்கலுற்றான்
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றார்
கருணரதுகேட்டுக் கட்டழகரோதுசொல்வார்
ஆயிரமமன்னர்களே ஆணழகர்நீங்களெல்லாம்
இப்பெரியசோலையிலே யிருந்தீர்களெல்லாரும்
மாஞ்சோலைக்காவல் இருந்தீர்கள்மன்னர்களே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகிக்கு
ஆர்கொடுத்தீர்மாங்காய் அறியவுரையுமென்றார்
எவர்கொடுத்தீர்மாங்கனிகள் எனக்கறியச்சொல்லுமென்றார்

பொன்னுருவிதாதி எங்களைக்காணாமல் மாங்காய்பறித்திரு
வேணுமென்று காவலர்கள் சொன்னது.

அன்னையா நீர்கேளும் எங்களுடன்வார்த்தை
ஆயிரம்பேர்காவலர்க்கு அதிகாரியானவனும்
மாமரத்தின்கீழாக மன்னவனும்பள்ளிகொண்டார்
போதேவருந்தடங்கண் பொன்னுருவி தாதியவள்
மாதரிளங்கொடியாள் மயில்போல்நடந்துவந்து
தாமமுடியாற்குத் தலைபாரத்துகொண்டிருந்தாள்
இருவருமபேசியல்லோ இனியசண்டைபண்ணுனார்கள்
ஒருவர்க்கொருவருக்கத்து மேசண்டைபண்ணுனார்
சண்டைபண்ணுமவேளையிலே நடந்தாளே தாதியரும்
அதிகாரிதானெழுந்து அடித்துத்துரத்தலுமுற்றா
உற்றபெருமசேனையிலே ஓடினாள் தாதியரும்
ஓடினாளுடதிலே ஒருமாங்காயகின்னிஞமோ
கிளிப்பறித்தாளோ இனிமொழியாள்நாயகியும்
ஓடிப்பறித்தாளோ உத்தமியாள்தாதியரும்
தாமக்குநங்குழலாள தாவிப்பறித்தாளோ
ஏதுபறிபோமென்று சொன்னார்களகாவலர்கள்

கருணர்பொன்னுருவி வீதியில் காவலரிலொருவனாக் கட்டியடித்தது.

காஞ்சிநாடாளுமு கருணராசுகேட்டு
உத்தமனார்காவலற்கு வுளமர்மந்தானுரைத்து
போதேவருந்தடங்கண் பொன்னுருவி வீதியிலே
கட்டுங்கயிறெடுத்துக் காவலரோவாருமென்றான்
அடிக்குங்கயிறெடுத்து வாருமென்றான் ஆணழகன்
அந்தவுரைகேட்டு அழகானகாவலர்கள்
கட்டுமகயிறுகளும் கையில்பிரம்புகளும
மாங்காய்கொடுத்ததொரு மன்னனுடனாக
போதேவருந்தடங்கண் பொன்னுருவிவீதிவந்து
மாங்காய்த்திருடிக் கொடுத்ததொருமன்னவனை
துன்னிலங்கண்ணார்கள் தொயரத்தில்கட்டினார்கள்
மாறுமுள்ளமன்னவனை மறுமமாய்க்கண்காட்டி
கருணரவர்கண்காட்ட கண்டந்தக்காவலரும்
கையில்பிரமபெடுத்துக் காவலர்களேதுசெயதார்
வீசியடிக்கலுற்றார் மேலானமன்னவனை
தாவியடிக்கலுற்றார் தார்வேந்தரெல்லாரும்
எட்டிமயிர்பிடித்து கட்டியடிக்கலுற்றார்
அடிபட்டமன்னவனும் அலறியேகூறலுற்றான்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுக்கூவினான்
அடிபொறுக்கமாட்டாதே யலருகிறான்மன்னவனும்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

மாங்காய்கொடுத்தகாவலனைகருணர் அடிப்பதைநிறுத்தும்படி
தாதி பொன்னுருவியிடத்தில் சொல்லிக்கொள்வது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியரும்
மாங்காய்திருடிவந்த மாலைக்கருக்குழலும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
மாங்காகொடுத்தவொரு மன்னவனும்வாருகிருன்
கருணருடைகையாலே கைலாசம்சேருகிருன்
மாங்காய்க்குத்தன்னாலே மாளவோமன்னவனும்
காஞ்சிநாடாளும் கருணர்பெருமானுக்கு
மூத்தானவாய்பிறந்து விஸ்தாரமசொன்னாலே
காஞ்சிநாடாளும் கருணர்மனம்பொறுத்து
அடியைவிலக்குவார் ஆனந்தவாழ்மாரி
என்றுமவளுரைக்க ஏதுசொல்வாள்பொன்னுருவி

பொன்னுருவிதன்னிடத்தில்வந்துசொல்லிக்கொண்டதாதியின்
இஷ்டப்படி மனவருத்தத்துடன் சொல்லியனுப்புகிறது

தாதிமுகம்நோக்கி தார்குழலாள்ஏதுசொல்வாள்
பிள்ளைபெறவேணுமென்று பெரியதவஞ்செய்தேனே
மைந்தன்பெறவேணுமென்று மாதவங்கள்செய்தேனே
போதுமடிஎந்தனுக்கு புத்திரனாய்வந்தகொள்ளை
என்றுமனஞ்சலித்து ஏதுசொல்வாள்பொன்னுருவி
தாமக்கருகுழலே தாதியரேநீர்கேளும்
காஞ்சிநாடாளும் கருணரருகில்வந்து
மாங்காயளவெடுத்து மாங்கனிபோல்பொன்னெடுத்து
கருணருடகைத்தலத்தில் கட்டமுகிகொடுத்து
காஞ்சிநாடாளும் கருணருக்குதெண்டனிட்டு
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
அடிவிலக்கச்சொன்னாளென்று அவருக்குரையுமென்றாள்
நானுரைத்தபாவனையாய் நீயுரைத்துவாருமென்றாள்
அவ்வார்த்தைநான்கேட்டு ஆரணங்குதாதியரும்

தாதிபொன்னுருவிகொடுத்த பொன்மாங்கனி கருணரிடத்திற்
கொண்டுபோய்க்கொடுத்து அடியைநிறுத்தச்சொன்னது.

போமுளவள்தாதி பொன்னுபரணமின்ன
பொற்பிரப்பங்கோல்பிடித்து போமுளவள்தாதி
காசிஞ்நாடாளும் கருணருக்குமுன்னேவந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டாள்
காற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டாள்

ஐங்காலவைப்வந்து அடிவணங்கிதெண்டனிட்டாள்
காஞ்சிநாடாளும் கருணாரவர்பார்த்து
அடிஇறுக்குமென்றுசொல்ல ஆணழகர்ஏதுசொல்வார்
நீ ஆர்பெண்ணே தாதி அறியவுரையுமென்றார்
அப்போதுதாதி ஆரணங்குஏதுசொல்வாள்
ஆபணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
பேர்பணியுமல்ல பெருமாள்திருப்பணிதான்
பொன்னுருவிநாயகியாள் பூவையுடதாதியென்றாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதாதியென்றாள்
காஞ்சிநாடாளும் கருணாரவர்கேட்டு
நீ-இங்குவந்தகாரணத்தை எனக்கறியக்கூறுமென்றார்
அப்போதுதாதி ஆரணங்குஏதுசொல்வாள்
மாங்காயளவாகக் கொடுத்ததொருபொன்னெடுத்து
கருணருக்குமுன்னேவைத்து கட்டழகியேதுசொல்வாள்
அடியைவிலக்குமென்று ஆரணங்குதெண்டனிட்டாள்
அந்தவுரைகேட்டு ஆணழகர்ஏதுசொல்வார்
எங்களரண்மனையிலிருந்ததொருபொன்னையெல்லாம்
திருடிவந்துபொன்னுருவி தான்கொடுத்தாள்தந்தனுக்கு
எங்களுடைமையது எந்தன்கையில்சேர்ந்ததுதான்

கருணர்பொன்னுருவி தாதிகொண்டுவந்தபொன்மாங்கனியைப் பறித்துக்கொண்டு மறுபடியுங்காவலனை அடிக்கச்சொன்னது

இன்னங்-கட்டியடியுமென்றான் காவலர்வீரியனும்
கருணருரைகேட்டுக் காவலர்களப்போது
வீசியடிக்கலுற்றார் வேல்பொருதுங்கண்ணனை
கட்டிமயிர்பிடித்து கட்டியடித்தார்கள்
முத்தாந்தவாழ்மார்பர் மோதியடிக்கலுற்றார்
அடிபொறுக்கமாட்டாமல் அலறுகிறான்மன்னவனும்
கூவியழுகலுற்றான் கொற்றப்போர்வீரியனும்
அழுதகுரலினால் அவலோகம்கேட்டுதங்கே
கூவுகிறகூச்சலென்றால் கொற்றவற்குகாதடைக்கும்

கருணர்பொன்மாங்கனியைப் பறித்துக்கொண்டு காவலனை அடிப்பதில்தடையின்றி தன்னைத்துறத்தியதை தாதிபொன்னுருவியிடம் வந்துசொன்னது.

அப்பெரியகூச்சல்கேட்டு ஆரணங்குதாதியரும்
மனதுபொறுக்காமல் வாராளேதாதியரும்
ஆங்காரந்தன்னுடனே ஆணழகிவாராளே
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவந்து
ஆங்காரந்தன்னுடனே அடிவணங்கிதெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பஎழுந்திருந்து

மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவியேதுசொல்வாள்
போனதொருகாரியங்களைப்புதுமைகளைச்சொல்லுமென்றாள்
அப்போதுதாதியவள் ஆணமருகேதுசொல்வாள்
மாங்காயளவாக நீகொடுத்தபொன்னெடுத்து
கருணருக்குமுன்னேவைத்துக் கவிழ்விழுந்தேனே
அடியைவிலக்குமென்று அடிவணங்கித்தெண்டனிட்டேன்
காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து
எவருடையது எனக்குவந்துசொந்தமென்று
இன்னங்கட்டியடியுமென்றார் காவலனார்வீரியனை
பார்த்துவயிறெரிந்து பதறிநடுங்கவந்தேன்
கண்டுவயிறெரிந்து காணவந்தேனுந்தனிடம்
என்னவுபாயமது ஏதுசெய்வோமாச்சியென்றாள்

மறுபடியும் கருணர் காவலனை அடிப்பதைநிறுத்த
பொன்னுருவி தன் ஆபரணமுதல் ஏதுவேண்டினாலுந் தருகிறேனென்று
தாதியுடன்சொல்லி அனுப்பினது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்கேட்டு
தாதிமுகமநோக்கித் தையலாளேதுசொல்வாள்
காஞ்சிநாடாளும் கருணருக்குச்சென்று
ஏதேதுகேட்டாலும் இளங்கொடியாள்தாரேனென்றாள்
அடியைவிலக்கச்சொல்லி நாரணங்கேகேளுமென்றாள்
அவர்-என்னுடமைகேட்டாலும் ஏதேதுகேட்டாலும்
எந்தனுடமையது அங்கலுங்கேட்டாலும்
அதனையுந்தாரேனென்று அவருக்குத்தெண்டனிட்டு
அடியைவிலக்கிவாரும் ஆரணங்குதாதியென்றாள்
அந்தவுரைகேட்டு ஆரணங்குதாதியவள்
வாராளவள்தாதி வளம்பெரியவீதியிலே
காஞ்சிநாடாளும் கருணரெதிரேவந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டாள்
நாற்கால்வலம்வந்துநமஸ்கரித்துத்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து
அடியைவிலக்குமென்று ஆணழகரோதனாப்பார்
நீ-ஆருடையதாதி அறியவுரையுமென்றார்
எவருடையதாதி எனக்கறியக்கூறுமென்றார்
அப்போதுதாதி அடிவணங்கியேதுசொல்வாள்
ஆர்பணியுமல்லவடியேன் திருப்பணிதான்
பேர்பணியுமல்லபெருமாள் திருப்பணிதான்

பொன்னுருவிதாதியென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டாள்
காஞ்சிநாடாளும் கருணைவிரதுரைப்பான
நீயிங்கேவந்ததை எனக்கறியக்கூறுமென்றான்
கட்டழகிதாதியவள் கருணருக்குஏதுசொல்வாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
உங்களுக்குச்சொல்லுமென்று உத்திரவுசொன்னாளே
பொன்னாபரணமெல்லாம் பொற்கொடியாள்தான்கழட்டி
இட்ட உடைமையெல்லாம் இளங்கொடியாள்தான்கழட்டி
அத்தனையும் உங்களுக்கு ஆரணங்குதாரேனென்றாள்
அடிமையிலக்குமென்றாள் ஆரணங்குபொன்னுருவி
அந்தவுரைகேட்டு ஆணழகுமன்னன்

கருணாபொன்னுருவி ஆபரணமெல்லாங் கொண்டுவந்துகொடுக்தால் அடியைநிறுத்துகிறேனென்று தாதிக்குச்சொன்னது.

போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
அவளுடைமைஅத்தனையும் ஆரணங்கேவாங்கிவந்தால்
அடிமையிலக்கிடுவேனே ஆரணங்கேயென்றுரைத்தார்
அந்தவுரைகேட்டு ஆரணங்குதாதியரும்
ஓட்டப்பெருநடையாய ஓடிவந்தாளதாதியரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்றாள்
கர்ணனுடதேசியவள் கட்டழகிமாதருக்கு
தாயபோல்வளர்த்தெடுத்த தாதிவந்துதெண்டனிட்டாள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
தாதிமுகம்நோக்கி தையலருமேதுசொல்வாள்
போனதொருகாரியங்கள் புதுமையெனனசொல்லுமென்றாள்
சொன்னதொருகாரியங்கள் சீக்கிரமாய்சொல்லுமென்றாள்
தையல்முகம்நோக்கி தாதியருமேதுசொல்வாள்
இட்ட உடைமை அடங்கலும்தந்தாக்கால்
அடிமையிலக்கிடுவேனென்றுரைத்தார்ஆணழகன்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியும்
இவள்-இட்டஉடைமையெல்லாம் ஏந்திழையாள்தான்கழட்டி
தங்கஉடைமையெல்லாம் தான்கழட்டிதையலரும்
அத்தனையும்மூட்டைகட்டி ஆரணங்குகைகொடுத்தாள்
எடுத்துநடந்தாளே ஏலங்கறுங்குழலாள்
எட்டடியும்ஓரடியாய் எட்டியவள்நடந்து
பத்தடியும்ஓரடியாய் பதறிநடந்தாளே

பொன்னுருவிதாதியிடத்தில் அனுப்பிய ஆபரணமெல்லாம் கருணர்வாங்கிக்கொண்டு மறுபடியுங்காவலனை அடிக்கச்சொன்னது

காஞ்சிநாடாளுங் கருணருக்குமுன்னேவந்து
பணிமுகத்துமுன்னேவந்து பாவையருந்தெண்டனிட்டாள்
தங்கஉடைமைகொண்டு தையலருமுன்னேவந்து
வந்துப்பணிந்தவளை கண்டுமனமகிழ்ந்து

அவள்-கொண்டுவந்தபொன்னுடைமை கொற்றவனுர்தான்வாங்கி
காஞ்சிநாடாளும கருணைமெத்தனுடைப்பார
நானகேட்டஉடமையெல்லாம எந்தனுககுவந்ததுகாண்
நான்-போட்டஉடமைபெலலாம தந்தாளேபொற்கொடியாள்
இணைமடியுமென்றா கருணாபெருமாளும
கட்டியடியுமென்றா கருணாபெருமாளும
அப்படிககேகட்டியடித்தாரகள காவலாகள
தாதியவளபார்த்து தையலருமேதுசொல்வாள்
கருணாமுகமநோக்கிக கட்டழகிசொலலுகிறாள்
போதேவருநதடங்கண் பொனனுருவிநாயகமும
என்னென்னதந்தாலும் என்னுதுளன்றீரோ
மாதரந்தபொன்னுருவி மனதுகனையுறாளே
என்னைப்பணிவிடைகள் செய்தால்விடுவீாகள்
ஏதுசெய்தால்விடுவீாகள் தெரிகதிடவேசொல்லுமென்றாள்
காஞ்சிநாடாளுங் கருணாரதுகேட்டு
தாதிமுகமநோககி தார்வேந்தேதுசொல்வார்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகிக்கு
இருககின்றஆஸ்தியெல்லாம் எநதனுக்குதந்தாளே
அடிமையாிறுததிவைப்பேன் ஆரணங்குதாதியென்றான்
தாதிமறுபடியுமபோய் கருணார் உன்னுடைய
ஆஸ்தியெல்லாம்கொடுததால் அடிமை
நிறுததகிறேனெனறுசொல்ல
பொன்னுருவி ஆபரணங்கொடுததனுப்பியது.
அந்தஉரைகேட்டு ஆரணங்குதாதியரும்
ஓட்டம்நடையுமாய் ஓடி வந்தாள்தாதியரும்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமுன்னேவநது
தாமகுழலாளும் தாதியவள்தெண்டனிட்டாள்
போதேவருநதடங்கண் பொன்னுருவிநாயகமும்
போனதொருகாரியஙகள் புதுமைகளைச்சொலலுமென்றாள்
அந்தயுரைகேட்டு தாதியருமேதுசொல்வாள்
நீ-கொடுததஉடமையெல்லாம் கொண்டுபோய்நான்கொடுத்தேன்
அததனையுமவாங்கினார் ஆணழகன்கருணாரவா
வாஙகியவருள்ளேவைத்து மகாராசனேதுசொல்வார்
நானிட்டஉடமையெல்லாம் எந்தனுககுவந்ததோடி
இன்னம-காரிழையாள்கைதனிலே இருக்கும்உடமையெல்லாம்
ஆணழகிமாளிகையும் அவளுடைய ஆஸ்தியையும்
அததனையும்கொடுததால் அடிமையிலககுவேனென்
என்றுதான்சொன்னாரோ மியலானகருணாரவர்
அந்தவுரைகேட்டு ஆணழகிபொன்னுருவி
தஙகஉடமைகளும் தங்கததால்பெட்டிகளும்,
பொன்னால்உடமைகளும் பொறபொட்டிரததினமும்

எட்டுக்கால்கட்டிகளும் இருக்கின்றபூஷணமும்
தங்கத்தில்காணிகளும் தனக்குள்ளபூஷணமும்
ஆரணங்குவாசம்பண்ணும் அவளுடையமாளிகையும்
மயிலனையாளவாசம்பண்ணும் மண்டபமும்உப்பரியும்
அம்மமாதான்கொடுத்த அழகானமாளிகையும
மாமன்மாதான்கொடுத்த மண்டபமுமகோபுரமும
மஞ்சளுக்குவிட்டதொரு வளமபெரியகாணிகளும
இஞ்சிக்குவிட்டதொரு யெலுமிச்சதோப்புகளும்
வெத்திலைக்குவிட்டதொரு விஸ்தாரதோப்புகளும
தேங்காய்பறித்துண்ணும் சிறப்பானதோப்புகளும்
இந்தனையுந்தானெழுதி ஏலக்கருங்குழலாள்
கண்ணுடையஓலையிலே கையெழுத்துமதானபோட்டு
ஸ்ரீகாரர்க்கருணருக்கு தெண்டனிட்டேனென்றுசொல்லி
தெண்டனிட்டேனென்றுசொல்லி தேவருக்குநேருரைத்து
ஓலையைக்கொண்டு கொடுமென்றாள்உத்தமியும
தீவ்சேவாலைதானவாங்கி ஆரணங்குதாதியரும்

தாதி பொன்னுருவிகொடுத்த ஆபரணமும் ஓலைச்
சுருளையுங்கருணரிடத்தில் கொடுத்தது.

எட்டடியும்ஓரடியாய விட்டுநீகடந்து
பத்தடியுமஓரடியாய் பதறிபவளநடந்து
காஞ்சிநாடாளும கருணர்க்கெதிரேவந்து
பட்டோலைமுன்னேவைத்து பாங்கியவளதெண்டனிட்டாள்
கையோலைமுன்னேவைத்து கட்டழகிதெண்டனிட்டாள்
காஞ்சிநாடாளும் கருணரவாபார்த்து
ஓலையைதானெடுத்து வாசித்தார்உத்தமனும்
குஞ்சிரிப்புகொண்டு குலுங்கநகைநகைத்து
உடம்புகுலுங்கி மேவ உத்தமருந்தானநகைத்து
தாதிமுகமநோக்கி தானலந்தாவதுசொல்வார்

பொன்னுருவிதாதிவசமகொடுத்தனுப்பிய ஆபரண
மெல்லாங்கருணா பெற்றுககொண்டு மறுபடியும
காவலனைகட்டி அடிக்கச்சொன்னது.

நாங்கள்-இட்டஉடமைகளும எழுபரிமண்டபமும்
மஞ்சளுக்குவிட்ட வளமபெரியசோலைகளும்
அத்தனையும்எங்கள்து ஆரணங்குதாதியரே
எங்களுடைமையெல்லாம எங்களுக்குத்தவந்ததடி
மன்னவனார்சேவுகனை வாறியடியுமென்றார்
காவலனாவீரியனைக் கட்டியடியுமென்றார்
அத்தவுனைகேட்டு அங்கிருந்தசேவகர்கள்
கட்டியடித்தாரோ கனககமுடிசேவுகரும்
வீசியடித்தாரோ வேல்பொருதுங்கண்ணனை

மயிலைப்பிடித்தடித்தார் மாஞ்சோலைக்காவலனை
அடித்த அடியாலே அலறுகிறான் மன்னவனும

பொன்னுருவியால் அனுப்பப்பட்ட தாதி கருணர்
செய்வதைப்பொறுக்காமல் மன்னவருக்குத்த
த்டன் அவனைக்கேட்டுக்கொள்வது.

அப்போது தாதியவளாரணங்குமேது சொல்வாள
காஞ்சிநாடாளும கருணருக்குமுன்னேவந்து
வண்ண முடிவணங்கி மாதவள தாண்கேட்டு
ஐயாவேநீகேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும இன்னமொருவார்த்தை
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
அந்த-மங்கையிருக்குமிடம் மன்னனுமேவேவந்ததுவும்
கமலப்பூநாயகியைக் கட்டியணைந்ததுவும்
மாதரிளங்கொடிக்கு மைந்தனுண்டானதுவும்
மசக்கைப்பெரிதாகி மாங்கனிகள்கேட்டதுவும்
மன்னனுமுன்தோட்டத்திலே மாதுநான்வந்ததுவும்
ஒருமாங்காய்நான்பறித்து உத்தமிக்குச்சென்றதுவும்
மாதர்க்குக்கொடுத்ததொரு மாங்கனிகாவலரும்
மன்னன்பெருமாளும் வைதண்டஞ்சேருவதும்
அடிபொறுக்கமாட்டாதே அவலோகஞ்சேருவதும்
போதுமையாளந்தனுக் கொருமாங்காய்பறித்தகொள்ளை
இன்னமென்னகொடுத்தால் விடுவீர்காண்மன்னவரே
அந்தஉரைகேட்டு ஆணழகர்கருணரவர்

கருணர்தாதியைப்பார்த்து பொன்னுருவி எனக்குப்
போசனஞ்செய்துபோட்டால் அடியையிறுத்
துகிறேனென்றது.

நீ-கொடுப்பதும்வாங்குவதும் ஏற்காதுஎந்தனுக்கு
தருவதும்வாங்குவதும தையலேமாளாது
நீ-கொடுத்தஉடமையெல்லாம கொம்பனைக்குநான்கொடுப்பேன்
அவள்-தந்தஉடமையெல்லாம் தருவேன்காண்தையலர்க்கு
அவளுடையகையாலே அடிசில்சமைக்கவேணும்
தேசத்தையாளும் திரியோதிராசருக்கும்
பேண்டமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகிக்கும்
தோகைமயில்கண்ணாள் துற்சடையாள்நாயகிக்கும
எந்தனையுங்கூட உடனேபந்திவைத்து
அவளுடையகையாலே அடிசலி[illegible]வேணும்

நாங்களும்-போசனமுண்டபின்பு பொறகொடியாள் மாதுகன்னி
காசசாக்களிப்பாக்குங் கமமாறுவெற்றிலையும
எங்களுக்குத்தான்கொடுக்க வேணுங்காணமாதுகன்னி
அன்றுஇரவில அவளிடத்திலேயிருந்து
கட்டியணைந்து கலந்துவிளையாடவேணும
இதுகளுக்கெல்லாம இசைந்தாளேயாமானால்
மாதுகருங்குழலா ளவள்சொன்னாலாகாது
கையாலெழுதி தரவேணுங்கட்டழுகி
அப்படிக்கித்தந்தாலே அடியைவிலக்கிடுவேன்
என்றுமவருரைக்கத் தாதியதுகேட்டு
வீசிநந்தாளே விசையுடனே தாதியரும
ஆவ்வீதிவிட்டு அனுப்பினே தாதியவள
போம்தேவருந்தடங்கண பொன்னுருவிமுன்னேவந்து
தாமகச்சூழலாளுந் தாதியவள்தெண்டனிட்டாள
போதேவருந்தடங்கண பொன்னுருவியேநுசெய்தாள்
போனதொருகாரியங்கள் புதுமையென்னசொல்லுமென்றாள்
சென்றதொருகாரியங்கள் சேதியென்னசொல்லுமென்றாள

உன்கையால் கருணருக்குப் போசனஞ்சமைத்துப்
போட்டால் அடியை நிறுத்துவேனென்று
கருணர்சொன்னதை தாதிபொன்னுருவி
யிடம்வந்து சொல்வது.

அந்தவுரைகேட்டு தாதியவளேதுசொலவாள
காஞ்சிநாடாளுங் கருணருக்குத்தெண்டனிட்டு
கொடுத்தவுடமை அடங்கலு நானகொடுத்தேன்
விட்டுவிடவேணுமென்று வேந்தனுக்குத்தெண்டனிட்டேன்
அத்தனையுந்தான்வாங்கி அவருந்தென்று தானுரைத்தார்
மற்றுமுறையது கேட்டேனம்மாமன்னவரை
அடிசில்சமைக்கணுமாம் அவர்களுக்குப்போடணுமாம்
கருணமகாராசருன்னைக் கட்டியணையவேணுமாம
கட்டியணைந்து கலந்துவிடவேணுமாம்
அப்படிக்கேகல்லதென்று ஆரணங்கேயுரைத்து
வாயாலேசொன்னால் மாளாதாமன்னவற்கு
கையாலெழுதி தந்தாளேசம்மதிப்பார
அப்படிக்கிசெய்தாலே அடியைநிறுத்திடுவார்

கருணர்பொன்னுருவிக்கு ஓலையெழுதுவதைக்குறித்து
தாதியின்பேரில் மனவருத்தப்பட்டு விசனப்படுகிறது.

அந்தவுரைகேட்டு ஏதுசொல்வாள்பொன்னுருவி
நீ-தாதியொருத்தி தரமறிப்பாயென்றறியேன்

மோப்பியொருத்தி மூலைகுலைப்பாளென்றறியேன
கட்டழகியொருத்துமவள காரிளம்பூவாளேதுசொல்வாள
ஓலையெடுத்தந்த உத்தமியாளதானெழுந்து
மூழிகுலத்தானென்று தீண்டாமல்நானிருந்தேன
சாதிகெட்டானென்று சொல்லி சலிப்பாகநானிருந்தேன்
தோப்பாகனென்றல்லவோ தீண்டாம்தானிருந்தேன
அடி-மங்கையர்க்கெந்தனுக்கு மசக்கைகுணமாகி
மசக்கைபெரிதாகி மாங்காயருண்ணதாகி
மாங்காயாலல்லவோ வந்துமுகம்பாக்கிறது
வானமுகம்பாக்கிறது வாய்வெண்மழைக்கிறது
இப்படிக்கிருந்ததோ ஈஸ்வரனாதனசெயலும
கடவுள்செயலோவென்று கலங்கியழுகலுற்றாள
தேம்பியழுகலுற்றாள தெய்வானைத்தாயினைந்து
அப்படிக்குத்தானழுக அங்கிருந்ததாதியாகள்

பொன்னுருவி விசனப்படுவதைப் பார்த்து தாதிகள
தைரியஞ்சொல்லுவது.

அங்கிருந்ததாதியாகள் அரிவைபாகளேதுசொலவாா
ஆனைகட்டிவாழ்ந்தாலும ஆரணங்கேனனுசசி
குதிரைகட்டிவாழ்ந்தாலும கொற்றாகுழலியரோ
பல்லக்கிலேறி வாழ்ந்தாலும பைங்கிளியே
கொண்டான்பெருமையது வேணுமம்மா கொம்பனையே
தாலிபெருமையது வேணுமம்மா தாரகுழலே
மைந்தனமெருமையது வேணுமம்மா தாரகுழலே
ஆரவீடு ஆரவீடு ஆசசியரே ஆரவீடு
ஆளனுக்குநீபணிந்தால தனலேகுறறமில்லை
பத்தாவைநீபணிந்தால பழுதொன்றுமவாராது
கொண்டவனைநீபணிந்தால் குறறங்களவாராது
அடிசில்சமைப்பேனென்று ஆரணங்கேநீஎழுந்து
போசனஞ்செய்யவல்லோ வாருமெனறுநீஎழுந்து
இப்படி-எழுதியனுப்பினால இதங்குமஅவாமனது
மனமிதங்கிமணவாளனும மறறும்பிழைபொறுப்பீா
மாங்காயகொடுத்ததொரு மணவாளனைவிட்டிடுவோா

பொன்னுருவிதாதிகள்தைரியஞ்சொன்னதின்பேரில்
மனந்தெளிந்துதாளிப்பனையோலைஎடுத்து கருணைக்கெழுதி
தாதிவசங்கொடுத்தனுப்பியது.

அந்தவுரைகேட்டு ஆரணங்குபொன்னுருவி
தாளிப்பனைஓலை வாரித்தலைவாரிந்து

வெள்ளிப்பனையோலை விருப்பமுந்தான் சீவி
செம்பொனெழுத்தாணிகொண்டு சீராககைபிடித்து
விக்கினரைவேண்டி விநாயகரைத்தான்தொழுது
கணபதியைவேண்டி கைதொழுது தெண்டனிட்டு
காஞ்சிநாடாளும் கருணர்பெருமானே
உங்கள்-அடிக்கீழ் முடிசாய்ந்தேன் அருங்கிளியாள்பொன்னுருவி
நான்-செய்தபெருங்குற்றமெல்லாம் தேவரீர் சிரிபொறுத்து
குற்றங்கள்செய்தாலும் குணமாகக்கொண்டணைத்து
மனதுபெரிதுகந்து மன்னவனே நீவிலக்கி
எனக்காகநீபொறுத்து இவ்வடியைநீவிலக்கும்
அப்படியென்றுசொல்லி எழுதினாள் ஓலையிலே
ஓலையெழுதியவளோ முத்தரிக்கந்தானைகேட்டு
தங்கச்சுருளோலை தாதிகையில்தானைகொடுத்தாள்
தாதியவளப்பொழுது தன்கையில்தான்தாங்கி
பொன்னோலைப்பிடித்து போறாளவளதாதி
காஞ்சிநாடாளுங் கருணரெதிரேவந்த
ஓலைச்சுருளைவைத்து உத்தமியாள்தெண்டனிட்டாள்

தாதிகொண்டுவந்தவோலையை கருணாவாசித்து
காவலனை கட்டவிழ்க்கச் சொன்னது.

காஞ்சிநாடாளும் கருணரவாபார்த்து
ஓலைச்சுருளெடுத்து உத்தமனாவாசித்து
கட்டழகிவார்த்தைகொண்டு கருணர்மனங்குளிர்ந்து
ஆள்பெருஞ்சேவகரை ஆணழகர்தானழைத்து
கட்டையவிழுமென்றார் காவலாகளவீரியனை
கட்டையவிழ்த்தார்கள் காவலனார்வீரியனும்
நுட்பம்உடையவனே நோகாதடித்தவாகள
ஓயாதழுதவனும் உடனேவெளியானான்
காஞ்சிநாடாளுங் கருணரெழுந்திருந்து
அவர்-எட்டிநடந்தாரோ எதிரொளிக்குஞ்சூரியன்போல்
சாஞ்சிநடந்தாரோ சந்திரனொளிபோலே
மாநகரமாளும் மகாராசன்மாளிசென்றார்
தேசத்தையாளுந் திரியோதிரனும்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகமும்
தோகைமயிலனையாள் துற்சடைப்பூநாயகமும்
எல்லவரும்ஒன்றாச வீற்றிருக்கும்வேளையிலே

கருணர்காவலனை கட்டவிழ்த்துப்போட்டு தன்வீடுவந்து
திரியோதிரன் பெருந்திருவாளதுற்சடையாள்
மூவரையுந்தன்னோடுகூடவந்து பொன்னுருவி
யிடத்திற்குப்போசனஞ்செய்ய அழைத்தது.

காஞ்சிநாடாளுங் கருணரவரங்கேவந்து
இருக்கின்றபேர்களுக்கு யேதுசொல்வார்கருணரவர்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிகையில்
விருந்துக்குத்தானழைத்தாள வேல்பொருதுங்கண்ணாளும்
அவள்-அழைத்ததினாலே நாமனைவோரும்போகவேணும்
இன்றைக்கிமத்தியான மெல்லவருந்தானிருந்து
விருந்துபொசிப்பதற்கு வாருங்களென்றுசொன்னான்
அந்தவுரைகேட்டு அவாகளெசித்துரைப்பார்
ஏதுகாண்மன்னவரே இதங்கினளோபொன்னுருவி
நாமிஞ்செழிக்கவோ நாமுஞ்சுகப்படவோ
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரிததா
வருகிறோமென்றுசொல்லி மணவாகள்தானிருந்தார்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

பொன்னுருவி-கருணருக்குச் சமையல்செய்தது

போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
ஆக்குமடப்பள்ளியை அலகிட்டுதான்திறந்து
கோட்டைமடப்பள்ளியை குச்சிட்டுதான்திறந்து
சாந்தால்தரைமெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரசுவாபூசி
ஆச்சாவுந்தேக்கும அரசம்பிளந்தடுக்கி
கெட்டென்றகல்லை கெரித்துநெருப்பாக்கி
தென்கடலுமாணிக்கம் திரட்டிஉமிசேர்த்து
வடகடலுமாணிக்கம் வாரிஉமிசேர்த்து
பெருநெப்பைமூட்டி பெண்கொடியாளேதுசெய்வாள்
பானைகழுவி பன்னீருலைவார்த்து
அரிதானச்சென்னெல்லை ஆத்திமணல்பொறுக்கி
அரிதானச்செந்நெல்லை தூத்திமணல்பொறுக்கி
பன்னீருலைவார்த்து பதமாகவைத்தாளே
அரிசியைத்தீட்டியே அன்பாகத்தான்போட்டு
பதம்பார்த்துதான்வடித்தாள் பைங்கிளியாள்கையாலே
வாழைக்காய்கொய்து வழுதலங்காய்காம்பரிந்தாள்

பாவக்காய்கொய்து பத்தங்காய்காய்பரித்து
சோலைப்பலாக்காய் சுளைசுளையாயகொய்திடுவாள்
மரப்பலாக்காய இளமுள்ளுகொய்திடுவாள்
நல்லவெல்லம்பூசினிக்காய் கொய்வாள புளியிடுவாள்
உப்பூரபுளியூர உகந்துமிகப்பொருந்த
தாளித்திறக்கினாள் சமைத்தபதார்த்தமெல்லாம்
நெய்காச்சியாற்றினாள் பொன்னுருவிப்பூமுடியாள்
பால்காச்சியாற்றினாள் பங்கயஞ்சேர்கண்ணாளும்
தாதியனைதானழைத்து தையலருமேதுசொல்வாள்
அடிசில்சமைந்ததடி அழைப்புமலனாயென்றாள்

பொன்னுருவி தாதியை அழைத்து கருணரிடத்திற்போய்சமையல் செய்து முடிந்ததென்று அவரையழைத்துவரச் சொன்னது.

அந்தவுரைகேட்டு ஆரணங்குதாதியவள்
சந்தோஷப்பட்டு தானடந்தாள்வீதியிலே
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவுகளுந்தான்தாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
மாநகரமாளும் மகாராசன்மாளிசென்றாள
தேசத்தையாளும் திரியோதிரன்முன்னேவந்து
அடிவணங்கிதெண்டனிட்டு தாதியவளேதுசொல்வாள்
யோதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள்
ஆனந்தவாழ்மாரி அடிசல்சமைத்தாளகாண்
அமுதுண்ணவாருமென்று அடிவணங்கிதெண்டனிட்டாள்

தாதிபோசனத்துக்கழைக்க கருணாதிரியோதிரன் துற்சடையாள் பெருங்கிருவாள் பந்துஜனங்கள் இவர்கள் எல்லாரும் பொன்னுருவி வீட்டுக்குவிருந்துண்ண வருகிறது.

அந்தவுரைகேட்டு ஆனந்தமாயெழுந்தா
கைகாலலம்பி கனிவாயைசுத்திபண்ணி
வாயோடும்பல்லு மதிமுகமும்சுத்திபண்ணி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்புமிட்டு
திக்கெங்குநோக்கி திசையெங்கும்ஆதரித்து
அம்பைமலர்போட்டு சூரியனைபூசைபண்ணி
ஐயனேமெய்யனே ஆயிரங்கண்இந்திரனே
பொய்சொல்வார்க்கெல்லாம் புறங்காக்கும்புண்ணியனே

மெய்சொல்வார்க்கெல்லாம விளக்கொளியாய்நின்றவரோ
முப்பதுமுக்கோடி முனிவரையும்பூசைபண்ணி
நாற்பதெண்ணாயிரம் ரிஷிகளையுமகைதொழுது
சுத்திவளையவந்து செவியிலொருபூச்சொருகி
இனிவொருந்தம்பிஎன்று இசைந்துநடக்கலுற்றார்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகியும்
தோகைமயில்கண்ணாள் துற்சனையாள்மங்கையரும்
கால்கைகள்சுத்திபண்ணி கலிவாயுங்கொப்பளித்து
சிவசிவாவென்று திருநீற்றுககாப்புமிட்டு
சுத்திவளையவந்து செவிதனிலேபூச்சொருவி
ஆரணங்குமடதெல்லாம் அரண்மனையினுட்புகுந்து
பட்டாடைதான்களைந்து பாவாடைதானுடுத்தி
சரிகைப்பாவாடையின்மேல் சாலுவைகள்மேல்போர்த்து
தாதியரைதானழைத்து தண்டிகைகொண்டுவாடியென்ன
தண்டிகையைதானெடுத்து தாதியர்கள்கொண்டுவந்தார்
அவ்வீதிதாண்டி வாரார்கள்வீதியிலே
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
செம்பவழவீதியெல்லாம் தாண்டியந்தையலர்கள்
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
போதேவருந்தடங்கண் பொன்னுருவிமாளிசென்றார்

பொன்னுருவிமாளிகைக்கு கருணர்முதலாக
அனைவோரும்விருந்துண்ணவந்தது.

மாளிகைக்குள்ளாக மன்னவர்கள்வந்தார்கள்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிதான்பார்த்து
வந்தவொருமன்னருக்கு வண்ணத்தடுக்கதுமிட்டாள்
சிம்மாதனங்களிட்டு வெண்போல்துயில்மடித்தாள்
இட்டதொருஆசனத்திலேறியவர்வீற்றிருந்தார்
இருவரந்தமாதருக்கு இட்டாளேபொன்தடுக்கு
இட்டதொருஆசனத்தில் இருந்தார்கள்மாதர்களும்
தேசத்தையாளுந் திரியோதிரன்முன்னேவந்து
வணங்காமுடியோனை வணங்கியேநின்றாளே

பொன்னுருவிதிரியோதிரன் பெருந்திரு
வாள்அவர்களைவணங்கி அவர்களால்
ஆசீர்வதித்தலைப்பெற்றது.

மாதுஇளங்கொடியாள் மாமாவைத்தெண்டனிட்டாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து

வந்துபணிந்தவளை கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீரவளர்ந்திருப்பீர வையகத்திருப்பீருயர்ந்திருப்பீர
சிறப்பீர்சிறந்திருப்பீர் நீடூழிவாழ்ந்திருப்பீர
பெற்றிடுவீர்பெற்றிடுவீர் பிள்ளைக்கிளையும்
அத்திபுரத்துக்கு அரசாள ஆணைபெறுவீர்
அங்கனுடநாடாள ஆண்பிள்ளைபெற்றிடுவீர
காசிவளநாடாள காளைகளைப்பெற்றிடுவீர
மலட்டர்களவாசலிலே மைந்தர்களைப்பெற்றிடுவீர
அம்பலத்துவாசலிலே ஆண்பிள்ளைபெற்றிடுவீர
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர
கருணைநாதனீயும கலந்து நீவாழ்ந்திடுவீர
வாழ்வீர்காணென்றுமே மனங்குளிரவாழ்த்தினார்
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியும்
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்முன்னேவந்து
காணிக்கைவைச்சியென்று கால்மேலேமுடிசாய்த்தாள
பேடைமயில்கண்ணாள் பெருந்திருவாளதானபார்த்து
வந்துபணிந்தவளை கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீரவளர்ந்திருப்பீர வையகத்திலுயர்ந்திருப்பீர
சிறப்பீர்சிலைதரிப்பீர நீடூழிவாழ்ந்திடுவீர்
கற்புடைத்தூண்போல கலங்காமல்வாழ்ந்திடுவீர
வில்புடைத்தூண்போல் விளங்கவேவாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிர்ந்துவாழ்த்தினாள
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
பிள்ளைபெறுநாளையிலே போதவுறவானீரோ
மைந்தன்பெறுநாளையிலே வணங்கிவுறவானீரோ
என்று-பரிபாசமாகவே பேசியவளிருந்தாள்
தோகைமயிலனையாள் துறசடையுமேதுசொல்வாள
போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகமே
காஞ்சிநாடாளுங் கருணைரவரோடிவந்து
நீ-கலந்துஉறவாடி கலக்கமற்றுவாழ்ந்தீரோ
கூடிவிளையாடி குணமுடனேவாழ்ந்தீரோ
எப்படிக்கியாகிலும் இருவர்மனமொத்து
கலந்திருந்தால்போதுமடி கட்டழகிநாயகமே
இப்படியேசொல்லி இருந்தாரகளெல்லவரும்

பொன்னுருவிகருணாமுதலானபேர்களுக்கும்
அன்னம்பகிர்ந்துபரிமாறுகிறது.

போதேவருந்தடங்கண் பொன்னுருவிநாயகியாள
ஆக்குமடைப்பள்ளியை அலகிட்டுநீர்தெளித்து

செம்பொன்மிஞ்சிக்கால்விருத்தி செம்பொன்தண்டைகளுமிட்டாள்
புலிமுகக்கால்விருத்தி பொன்முல்தண்டைகளுமிட்டாள்
இட்டதொரு ஆசனத்தில் ஏறியவாவீற்றிருந்தார்
வாழையிலைப்போட்டு மணிச்சொம்புநீர்தெளித்தாள்
மடைமலர்போலே போசனமுந்தான்சொரிந்தாள்
சுத்திகறிகளைவைத்து புத்துருக்கு நெய்வார்த்தாள்
குத்துப்பருப்புவிட்டு கூசாமல்நெய்வார்த்தாள்
பொரித்தபொறிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
கூட்டுக்கறியும் குழம்புவல்லகறியும்
ஆயிரத்தெட்டு அருங்கறியும்போசனமும்
முன்னூற்றியெட்டு முதகறியும்போசனமும்
அத்தனையுங்கொண்டுபடைத்தாளே ஆணழகி
அந்த அடிசல் அமுதுண்டபிற்பாடு
அகத்தினிலேமாற்றியொரு பொற்றளிகை முன்னேவைத்தாள்
காச்சியபாலும் திருத்தியமுப்பழமும்
வாழைப்பழமும் மதுரையின்மாம்பழமும்
வேரின்புறத்தில் வெடித்தபலாச்சுளையும்
கொம்பில்சிறுதேனும் கொத்துபடாசர்க்கரையும்
மலையில்சிறுதேனும் பாகானசர்க்கரையும்
அந்த அடிசல் அமுதுண்டபிற்பாடு
பாலடிசல்உண்டு பன்னீரால்கையலம்பி
உருவுகொண்டுவாய்பூசித்து உத்தமர்கள்வீற்றிருந்தார்
போதேலருந்தவங்கண் பொன்னுருவிநாயகியாள்
வயிரக்கல்பெட்டிதனை வகையுடனேதான்திறந்து
வாடாயிலைச்சுருளும் வண்ணத்துவர்பாக்கும்
கோர்வையிலைச்சுருளும் கொட்டைத்துவர்பாக்கும்
காச்சாகளிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஏலம்லவங்கமும் இசைந்தகளிப்பாக்கும்
சாதிப்பெருங்கட்டில் சங்குசுட்ட சுண்ணாம்பும்
சுருளைசுருள்மடித்து சுண்ணாம்பைக்கூட்டவிட்டு
சுத்தவிட்டபொன்தட்டில் உள்ளேசுருள்மடித்து
தங்கத்தாம்பாளந்தன்னில் தாம்பூலந்தானெடுத்து
அனைவருக்குமுன்பாக அவரவர்க்குத்தான்கொடுத்தாள்
தாம்பூலந்தான்தரித்து தயவாகத்தானிருந்தார்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

### கருணர் பொன்னுருவியுடன் கூடுகிறது.

கருணரும்பொன்னுருவி களித்துவிளையாடி
தன்னுடையமாளிகையில் தனித்துவிளையாடி
மன்மதனுமாரதியும்போல் மகிழ்ச்சியுடன்கூடி
கந்தரும்வள்ளியும் கைகலந்தபாவனைபோல்
இருவருந்தான்சேர்ந்து இசைவாகவாழ்கையில்

பொன்னுருவி புத்திரனைப்பெற்று விஸ்வகர்மனென்று
பெயரிடுகிறது.

பொன்னுருவிநாயகியாள் பொறுகொடியாளப்பொழுது
மாதுநல்லாள்பொன்னுருவி மைந்தருமுண்டாகி
ஓராந்தான்மாதமதில் ஒருதிங்கட்கிழமையாச்சு
இரண்டாந்தான்மாதமது இரண்டுதிங்களாதமாச்சு
மூன்றாந்தான்மாதத்திலே மூலைமுகந்தான்கறுத்தது
நான்காந்தான்மாதத்திலே நாயகியுமசக்கையாளுள்
ஐந்தாந்தான்மாதத்திலே அடிவயிறுபெருத்திடுமாம
ஆறாந்தான்மாதத்திலே அங்கமெல்லாந்தங்கநிறம
ஏழாந்தான்மாதத்திலே இளங்கொடியாளநாயகியும
பொறுங்கொடியாளநாயகிக்கு போசீந்தனுசெய்தார
எட்டாந்தான்மாதத்தி லிளைப்புந்தயிப்பாளை
இளைப்புந்தவிப்புமாறுள் இளங்கொடியாள்நாயகியும்
ஒன்பதாமாதத்திலே உடம்பெல்லாம்நோகுதென்பாள்
பத்தாந்தான்மாதத்திலே பெற்றாளேவிஸ்வகேதை
பெற்றாளேபொன்னுருவி பேருமிட்டாளப்பொழுதே
வளர்த்தாளேபொன்னுருவி வைத்திருந்தாளவிஸ்வகேதை
இப்படியாக இருக்கின்றவேளையிலே

பூலோகராஜாக்களவந்து சகலமானபேருக்கும
வாழ்த்துதல் செய்கிறது.

அப்போ பூலோகராசாக்கள் புத்திரனைத்தானபார்த்து
பூமாரிதானபொழிந்தார பூலோகராசாக்கள
மண்டலத்துராசாக்கள் மழைமாரிதான்பொழிந்தார்
மழைமாரிதான்பொழிந்தார் மண்டலத்துராசாக்கள்
பொன்னுருவிமசக்கைபுகழ்ச்சிபாயகேட்போர்கள
கருணைநாடிதன்கதையைக் காதாரக்கேட்டவர்கள
கலியாணமில்லாதார் கடுகாணமபெறுவார
புத்திரனில்லாதார் புத்திரனுண்டாகவார
அச்சிலடித்தவர்கள் அன்புடன்மிகவாழி
இதை-வாங்கிப்படித்தவர்கள் வாழ்வுண்டாய்தானிருப்பார்
பொன்னுருவிகதைகேட்டோர் புகழ்ச்சியாய்வாழ்ந்திருப்பார்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம முசியாமல்வாழ்ந்திடுவார
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனுர்

பொன்னுருவிமசக்கை.

முற்றிற்று.

---